THE

# TAMIL TEXT

FOR THE

15002

# MATRICULATION EXAMINATION



# UNIVERSITY OF MADRAS,

DECEMBER 1904.

PRICE 12 ANNAS.

Madras:
HIGGINBOTHAM & CO.,
Printers and Publishers to the University,
MOUNT ROAD.
1903.

# சூசிபத்திரம்.





# இராமாயணம்.

## ஒட்டக்கூத்தர்.

## உத்தரகாண்டம்.

### சீதை வனம்புகுபடலம்.

தீங்கறுகுணத்தோரேகச்சேடனின்சிரத்தின்பாரம்
நீங்கியதெனத்தான்போற்றிநெடுங்கடலவனிபாரம்
தாங்கியவீரனுச்சிச்சந்தியினியமந்தான்செய்
தாங்குயிர்த்தம்பிமாரோடமுதுசெய்திருந்தகாலை. 1.

கனமிடைவானத்திந்தக்கட்டுரையெழுந்ததோங்கிப்
புனைமணிப்பூணினாயான்புட்பகமெனக்குப்பண்டு
தனபதியுரைத்தகேட்டிதசரதராமன்றன்னாற்
கனைகழல்ரக்கர்கோமான்காலன்வாய்ப்படுதறிண்ணம். 2.

ஆயவன்பொன்றநின்னாலாவதுசெய்தியந்தத்
தீயவன்பொன்றவேயென்சிந்தைநோய்தீருமென்று
தூயவனெனக்குமுன்புசொன்னதேமுடிந்ததின்று
போயவன்றன்னைக்கண்டுவெருகிறேன்புவனநாத. 3.

என்றதுகூறக்கேட்டவிராகவன்வியந்துசால
நன்றெனமகிழ்ந்துகந்தநறுமலர்கொடுபூசித்துப்
பொன்றிகழ்விமானந்தன்னைப்போவெனவிடுத்தலோடும்
சென்றதுதனக்குவேண்டுந்திசையின்மேற்சிந்தையென்ன. 4.

அந்தவற்புதத்தைக்கண்டபரதனாச்சரியமெய்திச்
சுந்தரவில்லிதன்னைத்தொழுதிவைசொல்லுந்தூயோய்
இந்தமாநிலத்தைக்காக்கவிறைவநீயிசைந்தபின்பு
வந்தவற்புதங்களெண்ணில்வரம்பிலையென்றுகூறி. 5.

அத்திராதிகளாற்சாக்காடில்லைவாளரியால்யானைச்
சத்துருவில்லைவேங்கையாவொடுமானைச்சார்ந்து
மித்திரமாகுநீராளெருப்பினால்வீவோரில்லை
புத்திரர்மரணங்காண்பாரில்லையிப்புவனத்தெங்கும். 6.

நோயுறுவார்களில்லைநோயுறுமூத்தோருக்குக்
காயும்வெங்கூற்றமில்லைகணவனையிழப்போரில்லை
வாயுவுமுடலுக்கின்பமாகவந்தசையாநிற்கும்
ஆயிழையார்களெல்லாமாண்மகப்பெறுகின்றார்கள். 7.

மண்ணுலகுள்ளமன்னர்மைந்தர்கண்மங்கைமார்கள்
எண்ணிடுமெண்ணமெல்லாமிராமனேயரசுசெய்திக்
கண்ணகன்ஞாலங்காப்பானென்றுகட்டுரைப்பரென்ன
அண்ணலுமதனைக்கேட்டாங்ககமகிழ்ந்திருந்தகாலை. 8.

வேறு.

கழிந்துவீழ்பழுத்தவிலையினைவாகிக்காண்டொறுங்கவினுறத்தழை
[த்த
பழம்படாநீக்கிப்புதுப்படாம்போர்த்தபான்மைபோற்பாதவமெல்
[லாம்
பொழிந்ததேன்மலராற்பொன்னிறவாடைபோர்த்தனபோன்றன
[கோங்கம்
செழும்படாஞ்சிவந்தபோர்த்தனவொப்பத்திகழ்ந்தனசெம்மலர்ப்
[பலாசம். 9.

அண்ணலுமகிழ்திற்பிறந்தவாயிழையுமணிகொள்பூம்பொழிலிடை
[யடைந்தார்
தண்ணறும்புன்னைசண்பகஞ்செருந்திசந்தனஞ்சாதிபூந்தாழை
எண்ணருங்குருந்துபாடலமாதியெழின்மரமிடைநெருங்கியதை
விண்ணவர்கோமான்கற்பகச்சோலைமேதினியிழிந்ததொத்துள
[தை. 10.

தாவுமேழ்புரவிபூணுமோராழித்தேரவன்சார்வருமதனைக்
காவியுஞ்செய்யகமலமுந்தங்கள்கண்களுக்கஞ்சிநீரொளிப்பக்

தேவியுந்தானுஞ்சேயிழையாருஞ்செழுந்துறைபடிந்துநீராடும்
வாவியும்வாவிக்கரைதொறும்விளங்குமணியறைமண்டபத்தினை
[தை. 11.

மென்னடையன்னநின்னடைக்கஞ்சிவெளியிடைநின்றிடவெள்கித்
துன்னிடைமலர்ப்பூஞ்சோலையின்மறையத்தோகைநின்சாயலுக்கு
[டைந்து
தன்னடைகெட்டேயினியுயிர்தாங்கோமெனத்தழன்முழுகுவபோ
[ல
மின்னிடைப்பூணாய்விரிமலரசோகின்மேற்சென்றுவீழ்வனகாணாய்
12.

வெங்கதிர்நுழையாவிரிபொழிலுள்ளவேறுவேறாகியவிசேடம்
செங்கயற்கண்ணாய்காணெனக்காட்டிச்செறிகழற்சேவடியிராமன்
பங்கயவாவிப்பளிக்குமண்டபத்திற்பசுநறுந்தென்றல்சேவிப்ப
மங்கையர்வாழ்த்தமாகதரேத்தமடந்தையோடினிதுவீற்றிருந்தா
ன். 13.

பொன்னிறமேனிப்பூமகளோடும்பொருதிரைப்பாற்கடனடுவெண்
பன்னகவணைமேற்பண்டுதானிருந்தபடியெனத்தோன்றிமாய்ந்தி
[டாத
மின்னெடுங்கூடிமேதினிபடிந்துவிளங்குகார்மேகமாமென்னச்
செந்நிறமேனிச்சீதையைத்தனதுசெம்மலர்த்திருக்கையாலணைத்
[து. 14.

செய்வகையறியார்கண்டனர்திகைப்பத்திருந்தியதாளவாத்தியங்
[கள்
தைவரும்வண்ணமுவகைச்சதியுந்தப்பறத்தனித்தனிகாட்டிக்
கைவழிகண்ணுங்கண்வழிமனமுங்கலந்திடக்கற்பகநாட்டுத்
தெய்வமங்கையர்களுணினர்நிற்பச்சேயிழையார்நடமாட. 15.

எழுவகையிசைக்காரணமுடைப்பண்ணுக்கிசைந்தனதாளவாத்தி
[யங்கள்
தழுவிடவைத்துச்சராசரமுருகத்தாளத்தின்வழியுருவெடுத்து
விழிபுருவந்தோண்மிடறுகள்சலித்துவேறுபாடுறுவகையிசைநூல்
வழுவுதலின்றிவங்கியம்வீணைமயங்கிடமாகதர்பாட. 16.

அன்னசங்கீதமினிதுகொண்டாடியருந்தியாடையாபரணம்
மன்னவனிராமன்யாகதர்க்களித்துமாதொடுங்கோயிலின்வைகிப்
பன்மலர்பறித்துநீர்விளையாட்டிற்பரிந்துபின்னமுதினிதுண்டு
நன்னுதலாருந்தானுமப்பொழிலினுடொறுமாடுறுநாளில். 17.

அன்னவள்கர்ப்பவிலக்கணமெல்லாபமைவுறநோக்கியவவனி
மன்னவனிராமன்மங்கையைநோக்கிமனத்திடைவேண்டிநீயிருப்ப
தென்னெனவியம்பநாணினள்சிரிப்பவிராகவன்பின்னையும்பல்காற்
சொன்னபின்வேண்டியிருப்பதீதென்றுதூமொழியாளிவைசொல்
[லும். 18.

துங்கமாதவத்தோர்கங்கையாந்தெய்வத்துறையிடைக்குளித்தந்தி
[தொழுவோர்
பொங்குறூல்புரளுமார்பினர்புனைந்தவற்கலைபுரிந்தசெஞ்சடையர்
அங்கவர்வாழுமாச்சிரமத்தையடைந்தவர்க்கேவல்செய்தொரு
[நாள்
தங்கலும்வேண்டியிருப்பெனென்றுரைக்கத்தசரதராமனீதுரைத்
[தான். 19.

நாளைநாமுனக்குநற்றவத்தோர்களிருப்பிடங்காட்டுதுமென்று
நீள்குழலாளைக்கோயிலில்விடுத்துநீலமாமுகில்புரைநிறத்தோன்
வாளணிவிசயன்பத்திரன்றந்தவத்திரன்சுமாகதன்சுராஞ்சி
காளியர்முதலோர்சொல்பரிகாசகதைகள்கேட்டினிதுகொண்
[டாடி. 20.

இக்கதைகிடக்கவிறைவர்களென்றுமிடைவிடாதிராப்பகல்கேட்
[கத்
* தக்கவிந்நாட்டினகரியிற்சனங்கடம்மிலெப்பொழுதுதானுரைக்கும்
அக்கதையுரைமினென்றுவாள்சங்கோடாழிவிற்கதையிவையொ
[ழிந்து
மொய்க்குமாபுகழோடயோத்தியிற்றிருந்தோன்மொழிந்திடவ
[வரிவைமொழிவார். 21.

வங்கெதழிகடலைமலைகளாலடைத்துமதிளிலங்காபுரியழித்து
வெந்திறலரக்கர்குலத்தைவேரறுத்துவிண்ணவர்நோன்றலைபெடு
[ப்ப

* தக்கதை நாட்டின்-என்றும் பாடம்

இந்திரசித்தைக்கொன் றிராவணனையீரைந்துதலையறுத்துருட்டும்
சுந்தரவில்லிக்கெதிரிலையென் றுசொல்லுவார்தொல்லுலகுள்
[ளோர். 22.

ஆங்கவரிவ்வாறுரைத்திடக்கேட்டவரசர்கோனவர்களைநோக்கி
நாங்களிந்நகரினுட்டினிற்பிறக்குநன்மையுந்தீமையுங்கேட்டுத்
தீங்கவையகற்றிச்சிறந்தனசெய்துஞ்செப்புமிவ்விரண்டிசீர்கேட்ட
நீங்களொன் றுக்குங்கூசலீரென்னநின்மலகேட்டியென் றுரைப்
[பார். 23.

மன்னவனிராமன் மானபங்கத்தைமனத்தினுனினைக்கிலன்வானோர்
[க்
கின்னல்செய்தொழுகுமிராவணன் கொடும்போந்திடைவிடாதீராறு
[திங்கள்
தன்னெடுநகரிதனிற்சிறைவைத்ததையலைத்தாரமாய்க்கொண்டு
பின்னையும்வாழ்க்கைபேரிழுக்கென் றுபேசுவார்பெருநிலத்துள்
[ளோர். 24.

ஒத்தவரிவ்வாறுரைத்திடும்வெஞ்சொலுள்ளுறநிறத்தினிலொளி
[வேல்
தைத்ததுபோலவுளைந்துதன்சிந்தைதளர்ந்தபின் மானபங்கத்தால்
வித்தகராயதம்பியர்க்கூவிவேறிடத்திருந்தனன்கேட்ட
உத்தமனெல்லாந்தெரிவுறவுரைப்பானவர்தமக்கிவையிவைகூறும்.
25.

என் னுயிர்நீங்களென் வலிநீங்களென் னுறுதுணைவருநீங்கள்
என்னெழினீங்களென்றவநீங்களென்பிராதாக்களுநீங்கள்
என்னரசின்பநீங்களேயானுலென்பழியுப்பழிபுகழும்
அன்னதேயாகுமானபின்யானிங்கறைவதீரனைவருங்கேண்மின்.
26.

தீயவாளரக்கன்சிறையிடையிருந்துசெந்நெறித்தீயிடைமூழ்கி
ஏயுமாதவர்க்குமிமையவரானோரியாவர்க்குமென்மனத்துக்கும்
துயளாயிருந்தாளாயினுமுலகோர்சொல்லிடும்பெரும்பழிதனைக்
[கேட்
டோயுமென்னுள்ளமுண்மையாற்பயனென்னுலகுளோர்க்கொத்தி
[டாதொழியின். 27.

ஓதநீர்வேலையுலகுளோரில்லதுளதெனினுள்ள தாமுள்ள
தியாதொருபொருளையில்லையென்றுரைக்கினில்லையாமிதுவுலகியற் [கை
ஆதலாலவளையருந்தவத்தோர்களாச்சிரமத்தயல்விடுத்துப்
ஈதுநான்றுணிந்தகாரியமினிவேறெண்ணுவதொருபொருளில்லை. 28.

இவ்வகையிராமனியம்பிடக்கேட்டவின்னுயிர்த்தம்பிமாரொன்று [ம்
செய்வகையறியார் தியகைகேகிசீதையுமிராமனும்வனம்போம்
அவ்வகைநாற்றவன்றையிற்கலங்கியகத்தெழூந்துயரினராகி
எவ்வகையாலுமிதுவிலக்கரிதென்றிருந்தனரிடிவிழுந்தென்ன.29

கலக்குவனுலகமூன்றையுமென்றுகருதுமேற்கணத்தினின்முடிக் [குப்
இலக்குவன்றன்னையிராகவனேக்கியிங்கியான்றுணிந்தகாரியத்தை
விலக்குவனென்னுஞ்சிந்தையைவிட்டுவெவ்வினைவேரொடும்பறிய
மலைக்குவன்றவத்துமுனிவர்வாழ்வனத்துமடந்தையைவிடுதிகே [ளின்னும். 30.

கல்விசேர்முனிவர்தவவனமடங்கக்காட்டுவானிசைந்தனெனவளும்
சொல்லியவண்ணஞ்செய்குவெனென்றேயுவந்திடுஞ்சுமந்திரற்கு [ணர்த்திச்
சில்லுளைப்புரவித்தேர்மிசையேற்றிச்சீதையைச்செறிபுகழையன்
நல்லுயிர்த்தோழனுயவான்மீகிநற்றவஞ்செய்வனத்துய்த்தி. 31.

என்றடலிராமனியம்பிடக்கேட்டவிலக்குவனெழுந்துவெந்துய [ரால்
தன்றுணையில்லாச்சுமந்திரற்குணர்த்தித்தடமணித்தேர்பண்ணினி [யற்றிப்
பொன்றிகழ்மணிப்பூண்சீதைமாளிகையின்புனைமணிவாயிலிற்புகு [த
இன்றொருப்பாடிதேதெனவினவமேவலோர்க்கிலக்குவனியம்பும். 32.

மன்னவன்பெரியோர்மலர்ப்பதந்தன்னை வணங்கிடக்காட்டெனவு
[ரைத்தான்
என்னலுமவர்போயுரைத்தலுமெழுந்தவுவகையாலின்னுயிர் தளிர்
[த்தே
மின்னொளியாரமுதலவாபரணம்விளங்குசீர்நவமணியாடை
இன்னவைபிறவுந்தெரிந்துகொண்டிளையோனியம்பிடவேறினனி
[ரதம். 33.

சலக்கடல்கிழியச்சென்றிடுங்கலம்போற்றடமணித்தேர்செலத்தை
[யல்
வலக்கணுந்துடித்துவயிறெரிவுற்றுமனமுந்தன்மேனியுநடுங்க
இலக்குவனெனக்குத்தூர்க்குறியிதனாலென்விளைவென்றுநானறி
[யேன்
விலக்கரிதாயவிதியினால்விளையும்விளைவையார்மேதினியறிவார். 34.

தாமுறுதுயரந்தையலரறியார்சார்ந்தவித்தூர்க்குறியதனால்
தூமனமுடையவென்சுவாமிக்குந்துணியிலென்கொழுந்தன்மாருக்
[கும்
மாமியர்தமக்கும்வான்கிளைதனக்கும்வளநகரத்துள்வாழ்வோர்க்
[கும்
தீமையொன்றின்றிநன்மையாய்விடுகதெய்வமேயென்றுகைதொ
[ழுதாள். 35.

அன்னவக்குறிகளாயிழைகூறவகத்தெழுந்துயரனுயிளையோன்
சொன்னவிக்குறியானங்கிளையானோர்துயரின்றிச்சுகத்தினிதிருப்
[பார்
என்னலுமெழுந்தவுவகையளாகியிருந்துயரொழித்தவணிருப்பப்
பொன்மணிநெடுந்தேர்தென்றிசைநோக்கிப்போயதுதூயவர்ப்
[பொறுத்து. 36.

மாமதிமுகத்தின்மறுவறுகற்பின்மங்கையும்வருவனவெண்ணும்
தூமதியமைச்சன்சுமந்திரன்றானுந்துயருறுமனத்திளையோனும்
கோமதியென்னுநதியினைக்குறுகிக்கொடுங்கதிர்மேல்கடல்குறுகத்
தாமதில்வைகிப்பிற்றைநாளுச்சிதடப்புனற்கங்கையைச்சார்ந்தார்.
37.

கங்கையைச்சென்றுகாண்டலுமிளையோன்கண்கணீரரும்பிடக்காந் [திப்
பொங்கிய துயரம்புறப்படாவண்ணமடக்கிடவுண்ணின்றுபொரும
இங்குநீயிங்ஙனிடருறுவானேனிலக்குவவியம்புதியென்று
மங்கையீதுரைப்பமறுமொழிகொடாதுவாய்விட்டுக்கதறிடுங் [காலை. 38.

தூயவிந்நதியைக்கண்டவரெல்லாந்தொழுதுவந்தாடுவர்தூயோய்
நீயிடருறுவதென்னுலகத்தினினையிடர்செய்பவரில்லை
நாயகன்றன்னைப்பிரிந்தறியாதேனுனிரண்டுண்டுநான்பிரிந்தேன்
ஆயவன்றன்னைநினைந்துறுதுயரென்றறைந்திடவாயிழையுரைப் [பாள். 39.

நன்றிவித்தாகுலமொழுக்குடையநற்றவமுனிவரையெல்லாம்
சென்றடிபணிந்துதீவினையறுத்துத்திகழொளியாடையாபரணம்
என்றுணைத்தோழிமார்கட்குமவரையீன்றெடுத்தோர்கட்குமுதவ
இன்றொருநாளுமிருந்துநாமீடுமிலக்குவவிடருறலென்றாள். 40.

இன்னவாசகங்களேந்திழையியம்பவிலக்குவனிடரையுள்ளடக்கி
நன்னதிதனைநாவாயினிற்கடத்திநடந்துபோய்த்தென்கரைநண்ணி
மன்னவனிராமன்றேவியைமுறையால்வலஞ்செய்துமலரடிவணங் [கி
என்னுரைகேட்டியேழுலகுடையாயெனவவளியம்பெனவியம்பும். 41.

வேறு.

கடுந்துயர்மேற்கொண்டேறக்கண்ணினீர்வெள்ளஞ்சோர
ஒடுங்கியவலியினீரற்றுலர்ந்திடுமுகத்தனஞ்சி
நடுங்கியமனத்துநீரிஞத்தழுதழுத்துமெல்லப்
பிடுங்கியமொழியன்மங்கைக்கிவையிவைபேசலுற்றான். 42.

உத்தமகுணத்தோய்கேட்டியுலகமாதாவேகேட்டி
சுத்தனுஞ்சனகன்வேள்வித்தோன்றியதூயோய்கேட்டி
வித்தகனிராமனேவிவிட்டகாரியங்களெல்லாம்
தத்துவமானவண்ணஞ்சாற்றுவெனென்றுசாற்றும். 43.

வாடியமுகத்தன்வெய்யமானவேன்மருமத்தூன்ற
நீடியவுயிர்ப்பன்றான்முன்னினைத்தகாரியத்தின்மேலே
ஓடியமனக்காகுத்தனொல்லையினழைப்பவந்து
கூடியதம்பிமாரினெனைக்குறித்தினையகூறும். 44.

உலகத்தாருள்ளதென்றதுள்ளதாமொலிநீர்வேலை
உலகத்தாரில்லையென்றதில்லையாமுணருங்காலை
உலகத்தாருள்ளதென்றதில்லையென்றுரைக்குமாகின்
உலகத்துக்கவன்பேயாகுமுண்மையாற்பயனொன்றில்லை. 45.

சீதையைக்கொடுபோய்வெய்யோன்சிறையிடைவைப்பமீட்டும்
காதலாலவளைக்கொண்டுகாகுத்தன்வாழும்வாழ்விற்
சாதலேயழகிதென்றுசாற்றுவர்தரணியுள்ளோர்
* ஆதலாற்சுத்தையென்றேயறிந்துவைத்தவளைநீத்தோம். 46.

என்றவனியம்பவெல்லோமெதிர்மொழிகொடுக்கவஞ்சி
நின்றவணடுங்கவந்தநெடுந்தகையென்னைநோக்கித்
துன்றியமணித்தேர்தன்னைச்சுமந்திரற்பண்ணச்சொல்லி
இன்றிவனோடுநீயவ்வேந்திழைதனைத்தேரேற்றி. 47.

நன்னெறிநகருநாடுங்கடந்துபோயடவிநண்ணித்
தன்னுயிர்தன்னைவிட்டுத்தடம்புகழ்கொண்டவையன்
இன்னுயிர்த்தோழனாயவெழில்கொள்வான்மீகிவைகும்
பன்னகசாலையின்பாற்பாவையைவிடுதியென்றான். 48.

என்றவனியம்பவண்ணலேவலைமறுக்கவஞ்சி
இன்றுனைக்கொண்டுபோந்தேனென்றினையிளையோன்சொல்லாம்
கன்றியகனலினூடுகாய்ந்தநாராசஞ்சீதை
தன்றுணைச்செவியிலேறத்தரணியிற்றளர்ந்துவீழ்ந்தாள். 49.

விழுந்தனள்புரளுமந்தவெந்துயர்பொறுக்கமாட்டா
தெழுந்தனடிரியவீழுமிருகையால்வயிற்றையெற்றும்
அழுந்திடுதுயரவெள்ளத்தழிவுறுமருவிக்கண்ணாள்
கழிந்தனள்சீதையென்றுகலங்கினர்கடவுளோர்கள். 50.

* ஓதுவரென்ற சொற்கேட்டுளைந்ததென்னுள்ளமந்தோ-என்றும் பாடம்,

அன்னவளவத்தைகண்டாங்கிளையவனலறிவீழ்ந்தான்
பின்னையும்பாடுசாலப்பெருகவுண்டாதலாலே
இன்னுயிரரிதிற்பெற்றாங்கிருகணும்விழித்துமன்னர்
மன்னவனிராமன்றேவிவாய்விட்டுப்புலப்பலுற்றாள். 51.

வேறு.

அன்னேயோவையாவோவாருயிர்த்தோழிமீர்காள்
தன்னேரிலாதவென்றித்தாசரதியார்செய்த
இன்னாதவிச்செயலைக்கேட்டபோதென்படுதிர்
என்னேயிவ்வுலகத்தில்யானோவிங்கிவைபடுவேன். 52.

பையார்வெம்பணத்துலகிற்பழியாலேபழிமறைத்து
நெய்யாலேநெருப்பவிக்கநீணிலத்திற்கண்டறியேன்
கையார்வெஞ்சிலைதரித்தகாகுத்தனிடைக்கண்டேன்
உய்யாரென்மாமிமாரிவ்வுரைதஞ்செவியுறவே. 53.

கன்னெஞ்சராயென்னைக்காட்டில்விடச்சொன்னவரோ
வன்னெஞ்சராயதனுக்கிசைந்துவிடவந்தவரோ
நன்னெஞ்சம்விழிக்கணிந்தநங்கைமார்நகைசெய்ய
இன்னஞ்சாகாதிருந்தயானோநெஞ்சார்வலியார். 54.

பண்பிறந்தசொன்மடவார்பழித்தென்னைநகைப்பர்களோ
எண்பிறந்தவன்னெஞ்சனிராகவனென்றியம்புவரோ
மண்பிறந்தபின்பிறந்தமறிகடல்சூழ்வையகத்திற்
பெண்பிறந்தார்யான்பட்டபெருந்துயரம்பட்டாரார். 55.

கனிமனத்துக்காகுத்தன்கடலுலகிற்பழிக்கஞ்சித்
தனியொருத்தியான்கதறத்தனிக்காட்டில்விடுவித்தான்
பனியகற்றுமாதித்தன்பயங்கெடுத்துப்பழிப்பற்ற
மனுகுலத்திற்பிறந்தார்கட்கிவையோதான்மனுநெறியே. 56.

கைகேசிமனந்திரியக்கற்பித்தகூனியைப்போல்
மையார்கண்மடவாரோமைந்தரோமண்ணுலகில்
ஐயோவென்காதலனையாரோவிக்காரியத்தைச்
செய்வாயென்றிப்பொழுதுசிந்தையுறக்கற்பித்தார். 57.

என்றிணையபலபன்னியிருகண்ணீர்நதிபெருகக்
குன்றுகளுமரங்களுமக்கொடுமிருகங்களுங்குலைந்து
நின்றுருகவனதெய்வநெஞ்சழிந்துகண்பனிப்பக்
கன்றியநெஞ்சுடைச்சிதைகதறுகின்றவக்காலை. 58.

இளையவனுமொருவண்ணமிடர்க்கடலைக்கடந்தேறி
உளைவுறுசிந்தையினாளுக்குத்தமிகேளெனவுரைக்கும்
விளைவுறுவல்வினைப்பயனைவிண்ணவர்க்கும்வெலற்கரிதால்
வளைபயில்சூழ்கடலுலகின்மானுடரார்விலக்குகிற்பார். 59.

உலகுக்குநாயகனாயோராழிதனைநடத்தி
மலையொக்குமதகளிற்றின்மதிக்குடைக்கீழ்வாழ்ந்தநளன்
நிலைகெட்டுநேரிழையைநெடுங்கானத்திடைவிட்டு
மலையொத்தவினைப்பயனான்மடையனாய்வருந்தினனே. 60.

தன்னேரிலாதவரிச்சந்திரன்றன்மைந்தனையும்
மின்னேரிலாதவிடைமெல்லியலையும்விட்டு
முன்னேசெய்விதியாலேமுடைப்பறையற்காளாகி
என்னேதானிடுகொடுகொத்துநிலையிழிந்தான். 61.

முன்செய்தநல்வினையான்முகில்வண்ணன்றனைப்பெற்றாய்
பின்செய்ததீவினையாலவனைநீபிரிவுற்றாய்
என்செய்யாவிருவினைகளிவ்விடர்நீயுறுவண்ணம்
நின்செய்யுஞ்செயலெல்லாநெடுந்தவமேசெய்யென்றான். 62.

மாதவர்களடிபேணிமற்றவர்கள்விதிமுறையே
ஓதியநல்வழிவழுவாதுபவசித்தங்குன்னுடைய
காதலனையெப்போழ்துங்கருத்திடைவைத்துயர்தவஞ்செய்
ஈதுனக்குக்கருமமெனவிளையோனுக்கவளுரைப்பாள். 63.

நின்னுடையதமையனைநானிழல்போலப்பிரியாதேன்
அன்னவனுநானுஞ்சென்றடிபணிந்தவருந்தவர்கள்
உன்னுடையகாதலனின்றனைப்பிரிந்தகாரணந்தான்
என்னுரைநீயென்றபொழுதியானவருக்கென்னுரைப்பேன் 64.

பின்னுமவள்கூறுவாள்பேருலகமுழுதுடையான்
தன்னுடையபிழையல்லதாரணியோர்தப்பல்ல
என்னுடையவினையாலேயிச்செயல்கள்விளைந்தவென்றாள்
உன்னுடையதமையனுக்கின்றிளையானேயுணர்த்துதியால். 65.

என்றிணையவவள்கூறவிருகண்கணீர்சொரிய
வன்றிறலோன்மனமயங்கிவாய்விட்டுக்கதறுதலோ
டின்றிந்தவுரைகேட்கவென்னகுறைசெய்தேனென்
றொன்றியவெந்துயரிளையோனுறுதுயராட்கிவையுரைத்தான். 66.

கன்றியசிந்தையினாயுன்கணவனுனைக்கைப்பிடித்த
அன்றுமுதலின்றளவுமுன்னுடையவடிபணிந்தே
நின்றபொழுதினுந்தூயோய்நின்மேனிகண்டறியேன்
இன்றுதானுனைக்காணவல்லேனோவெனவுரைத்தான். 67.

வருதுயரந்தனைநோக்கிமங்கையலரடிபணிந்து
கருதிவினையறவுலகோர்சென்றாடுங்கங்கையெனும்
பெருநதியைக்கடந்தவளைப்பின்பார்த்துப்பின்பார்த்துப்
பொருமியவெந்துயரினனாய்ப்போயினானகர்நோக்கி. 68.

இன்னமிவர்போவாரோமீள்வாரோவெனநினைந்து
தன்னுடையகண்*பறியாச்சானகிதான்பார்த்திருந்து
பொன்மணித்தேரோகாணேன்போய்மறைந்தானிளையோனும்
என்னையறக்கைவிட்டாரெனக்கதறத்தொடங்கினாள். 69.

இலங்கையிலேநெடுங்காலமிருஞ்சிறையிலேயிருந்து
புலம்பியழுதியான்பட்டபுல்லனவும்போதாமல்
தலங்குலவுபழிபூட்டித்தனிக்கானில்விடுவித்து
விலங்கரியதுயர்விளைத்தவிதியேயோவிதியேயோ. 70.

ஏதமுறுபழிபூட்டியிப்பிறப்பிலெனையொழிய
மாதரையென்மனத்தாலுந்தொடேனென்றுவரந்தந்த
காதலனைமனங்கலக்கிக்காட்டிலெனைவிடுவித்து
வேதனைநோய்செய்வித்தவிதியேயோவிதியேயோ. 71.

கண்ணறைக்காகுத்தனெனைக்காட்டில்விடக்கண்டிருந்து
மண்ணகத்தார்வன்கொடுமைவாய்திறவாமானமிலாப்
பண்ணறைச்சியென்றெனைப்பழிதூற்றப்பண்ணுவித்தாய்
விண்ணவர்க்கும்விலக்கரியவிதியேயோவிதியேயோ. 72.

---

* பறிய - என்றும் பாடம்.

தாளார்செந்தாமரைத்தாட்டாசரதியார்மனத்தைக்
கேளானுருரையென்றுங்கேளாதவகைகலக்கிக்
கோளானதிடையறுக்கொடுவினையேனுக்கொருநாள்
மீளாதவனந்தந்தவிதியேயோவிதியேயோ. 73.

தக்ககணவன்சீறித்தன்னைக்கை*விட்டகலப்
புக்ககத்தார்கைவிடுவர்பிறந்தகத்தார்போற்றார்கள்
அக்கணமேபழியிடுவரன்னியர்களருவினையேன்
மிக்கொரிடங்காண்கிலேன்விதியேயோவிதியேயோ. 74.

இன்னபலவும்பன்னியிடருறுவாளிடர்தீர
என்னுயிர்தான்போகாதோவெனக்கதறுமக்காலை
வன்னியினுந்தூயனும்வான்மீகிமைந்தர்கடாம்
நன்னுதலாளழுமோசைவழிவந்துநண்ணுற்றார். 75.

அழுமவளைக்கண்டிரங்கியருந்தவனைக்கடிதணுகித்
தொழுதவர்கள்சொல்லுவார்சுரருலகுதனினின்றும்
வழுவியவள்வீழ்ந்தாளோமண்ணுலகிலுள்ளாளோ
எழுதரியமேனியாள்யாவளோவென்றறியோம். 76.

ஒருவரில்லாக்காட்டிலேயுள்ளுறுசோகத்தாளோர்
தெரிவையோர்துணையின்றித்தெய்வமேதுணையாகி
இருகணினீர்நதிபெருகவிழிந்துவீழ்ந்தழுகின்றாட்
கருள்புரியவுனக்கடுக்குமருந்தவத்தோயெனவுரைத்தார். 77.

வேறு.

அங்கவரோடும்போய்ச்சென்றழுகையோயாதுநெஞ்சில்
தங்கியசோகமாறச்சானகிதன்னைத்தேற்றி
இங்குநீயிருந்துசோகித்தென்பயனிடரைவிட்டு
மங்கைநீகேட்டியென்னுமாதவனுரைப்பதானான். 78.

அநகனுமிராமன்றேவியென்றுநீயமலையென்றும்
சநகன்மாமகளாமென்றுஞ்சமாதியிலுணர்ந்தேன்றக்க
உனையவன்காட்டில்விட்டானல்லனென்னுழையேவிட்டான்
எனநினையாங்கள்வைகுமிடத்திலெம்மோடும்போதி. 79.

---

விடக்கண்ட. என்றும் பாடம்.

எங்களாச்சிரமத்தெல்லையில்விடத்தெல்லையில்லா
மங்கையர் தவவேடத்தைத்தாங்கிமாதவஞ்செய்வார்கள்
அங்கவருன்னைக்கண்டாலகமகிழ்ந்துடனேகொண்டு
தங்களாச்சிரமத்தேபோய்த்தாங்குவர் தளரலென்றான். 80.

துங்கமாதவனிவ்வாறுசொல்லிடத்தூயளாகி
அங்கவனல்லறீர்க்குமடியிணைவணங்கிநிற்ப
மங்கையையுடனேகொண்டம்மாதவனோமதூபம்
தங்கியமுகட்டுப்பன்னசாலையைவந்துசார்ந்தான். 81.

சீதையைக்கண்டமாதர்தெரித்திரராகியுள்ளோர்
மாதனப்பெற்றாற்போலமகிழ்ந்தவள்வடிவைக்கண்டு
தீதறுமனத்தின்மிக்கதிருமகளிவளோவென்பார்
வேதனையுள்ளேயுண்டிம்மெல்லியலாளுக்கென்பார். 82.

தாங்கருஞ்சினத்தால்விண்ணோர்சபிப்பவீழ்ந்தாளோவென்பார்
ஆங்கவரிந்தவண்ணமையுறுகின்றகாலை
ஈங்கிவள்பிறப்பும்பேருமிவள்கணவன்றன்பேரும்
நீங்கள்கேண்மின்களென்னநெடுந்தவமுனிவன்கூறும். 83.

மனுக்குலம்விளங்கத்தோன்றிமறிகடன்மலையாற்கட்டித்
தனுவினாலிலங்கைசெற்றதசரதராமன்றேவி
துனியறுசனகன்பெற்றதூயவள்சீதையென்பாள்
இனையவள்கணவனானோன்றுறந்திடவிங்குவந்தாள். 84.

வேறு.

மாதவத்தோனங்கிவ்வகையுரைப்பமங்கையரனைவருமகிழ்ந்து
சீதையைப்போற்றச்சுமந்திரனோடுமிளையவன்றிருநகர்புகுந்து
நாதனைப்பணிந்துசெய்ததையுரைப்பநாட்டுள்ளோர்சொல்பழிகேட்டு
வேதனையுற்றவன்றினுமிக்கவேதனைப்பட்டனன்வீரன். 85.

துதிபழியிரண்டுங்கேட்டதுசொல்லுமுலகையுமதன்வழியொழு [கும்
மதியையுநோவவடாதுமாசனகன்மகளையுநோவவங்கடாதால்
அதிகுணவதியாயழலினுந்துய்யவவளையுமுன்னையும்விதித்த
விதியினைநோவவடுக்குமென்றிளையோன்விளம்பிடத்தெளிந்தனன் [வீரன். 86.

கம்பர் அருளிச்செய்த

# சரஸ்வதியந்தாதி.

## காப்பு.

ஆயகலைகளறுபத்துநான்கினையும்
ஏயவுணர்விக்குமென்னம்மை—தூய
உருப்பளிங்குபோல்வாளென்னுள்ளத்தினுள்ளே
இருப்பளிங்குவாராதிடர்.

படிகநிறமும்பவளச்செவ்வாயுங்
கடிகமழ்பூந்தாமரைபோற்கையும்—துடியிடையும்
அல்லும்பகலுமனவரதமுந்துதித்தாற்
கல்லுஞ்சொல்லாதோகவி.

## நூல்.

சீர்தந்தவெள்ளிதழ்ப்பூங்கமலாசனத்தேவிசெஞ்சொல்
தார்தந்தவென்மனத்தாமரையாட்டிசரோருகமேற்
பார்தந்தநாதனிசைதந்தவாரணப்பங்கயத்தாள்
வார்தந்தசோதியம்போருகத்தாளைவணங்குதுமே. 1.

இயலானதுகொண்டுநின்றிருநாமங்களேத்துதற்கு
முயலாமையாற்றடுமாறுகின்றேனின்றமூவுலகுஞ்
செயலாலமைத்தகலைமகளேநின்றிருவருளுக்
கயலாகிடாமலடியேனையுமுவந்தாண்டருளே. 2.

அருக்கோதயத்திலுஞ்சந்த்ரோதயமொத்தழகெறிக்குந்
திருக்கோலநாயகிசெந்தமிழ்ப்பாவைதிசைமுகத்தால்
இருக்கோதுநாதனுந்தானுமெப்போதுமினிதிருக்கும்
மருக்கோலநாண்மலராளென்னையாளுமடமயிலே. 3.

மயிலேமடப்பிடியேகொடியேயிளமான்பிணையே
குயிலேபசுங்கிளியேயன்னமேமனக்கூரிருட்கோர்
வெயிலேநிலவெழுமேனிமின்னேயினிவேறுதவம்
பயிலேன்மகிழ்ந்துபணிவேனுனதுபொற்பாதங்களே. 4.

பாதாம்புயத்திற்பணிவார்தமக்குப்பலகலையும்
வேதாந்தமுத்தியுந்தந்தருள்பாரதிவெள்ளிதழ்ப்பூஞ்
சீதாம்புயத்திலிருப்பாளிருப்பவென்சிந்தையுள்ளே
ஏதாம்புவியிற்பெறலரிதாவதெனக்கினியே. 5.

இனிநானுணர்வதெண்ணெண்கலையாளையிலகுதொண்டைக்
கனிநாணுஞ்செவ்விதழ்வெண்ணிறத்தாளைக்கமலவயன்
தனிநாயகியையகிலாண்டமும்பெற்றதாயைமணப்
பனிநாண்மலருறைபூவையையாரணப்பாவையையே. 6.

பாவுந்தொடையும்பதங்களுஞ்சீரும்பலவிதமா
மேவுங்கலைகள்விதிப்பாளிடம்விதியின்முதிய
நாவும்பகர்ந்ததொல்வேதங்களுன்குநாறுங்கமலப்
பூவுந்திருப்பதம்பூவாலணிபவர்புந்தியுமே. 7.

புந்தியிற்கூரிருணீக்கும்புதியமதியமென்கோ
அந்தியிற்றோன்றியதீபமென்கோநல்லருமறையோர்
சந்தியிற்றோன்றுந்தபனனென்கோமணித்தாமமென்கோ
உந்தியிற்றோன்றும்பிரான்புயந்தோயுமொருத்தியையே. 8.

ஒருத்தியையொன்றுமிலாவென்மனத்தினுவந்துதன்னை
இருத்தியைவெண்கமலத்திருப்பாளையெண்ணெண்கலைதோய்
கருத்தியையைம்புலனுங்கலங்காமற்கருத்தையெல்லாந்
திருத்தியையான்மறவேன்றிசைநான்முகன்றேவியையே. 9.

தேவருந்தெய்வப்பெருமானுநான்மறைசெப்புகின்ற
மூவருந்தானவராகியுள்ளோருமுனிவரரும்
யாவருமேனையவெல்லாவுயிருமிதழ்வெளுத்த
பூவருமாதினருள்கொண்டுஞானம்புரிகின்றதே. 10.

புரிகின்றசிந்தையி னூடேபுகுந்துபுகுந்திருளை
அரிகின்றதாய்கின்றவெல்லாவறிவினரும்பொருளைத்
தெரிகின்றவின்பங்கனிந்தூறிநெஞ்சந்தெளிந்துமுற்ற
விரிகின்றதெண்ணெண்கலைமாதுணர்த்தியவேதமுமே. 11.

கருந்தாமரைமலர்கட்டாமரைமலர்காமருதாள்
அருந்தாமரைமலர்செந்தாமரைமலராலயமாத்
தருந்தாமரைமலர்வெண்டாமரைமலர்தாவிலெழிற்
பெருந்தாமரைமணக்குங்கலைக்கூட்டப்பிணைதனக்கே. 12.

தனக்கேதுணிபொருளென்னுந்தொல்வேதஞ்சதுர்முகத்தோன்
எனக்கேசமைந்தவபிடேகமென்னுமிமையவர்தா
மனக்கேதமாற்றுமருந்தென்பரூடமலரென்பன்யான்
கனக்கேசபந்திக்கலைமங்கைபாதகமலங்களே. 13.

கமலந்தனிலிருப்பாள்விருப்போடங்கரங்குவித்துக்
கமலங்கடவுளர்போற்றுமென்பூவைகண்ணிற்கருணைக்
கமலந்தனைக்கொண்டுகண்டொருகாற்றங்கருத்துள்வைப்பார்
கமலங்கழிக்குங்கலைமங்கையாரணிகாரணியே. 14.

காரணன்பாகமுஞ்சென்னியுஞ்சேர்தருகன்னியரும்
நாரணனாகமகலாத்திருவுமொர்நான்மருப்பு
வாரணன்றேவியுமற்றுள்ளதெய்வமடந்தையரும்
ஆரணப்பாவைபணித்தகுற்றேவலடியவரே. 15.

அடிவேதநாறுஞ்சிறப்பார்ந்தவேதமனைத்தினுக்கு
முடிவேதவளமுளரிமின்னேமுடியாவிரத்ன
வடிவேமகிழ்ந்துபணிவார்தமதுமயலிரவின்
விடிவேயறிந்தென்னையாள்வார்தலந்தனில்வேறிலையே. 16.

வேறிலையென்றுனடியாரிற்கூடிவிளங்குநின்பேர்
கூறலையானுங்குறித்துநின்றேனைம்புலக்குறும்பாம்
மாறலைகள்வர்மயக்காமனின்மலர்த்தாணெறியிற்
சேறலையீந்தருள்வெண்டாமரைமலர்ச்சேயிழையே. 17.

சேதிக்கலாந்தர்க்கமார்க்கங்களெவ்வெவர்சிந்தனையுஞ்
சோதிக்கலாமுறப்போதிக்கலாஞ்சொன்னதேதுணிந்து
சாதிக்கலாமிகப்பேதிக்கலாமுத்திதானெய்தலாம்
ஆதிக்கலாமயில்வல்லிபொற்றாளையடைந்தவர்க்கே. 18.

அடையாளநாண்மலரங்கையிலேமணிவடமும்
உடையாளைநுண்ணிடையொன்றுமிலாளையுபநிடதப்
படையாளையெவ்வுயிரும்படைப்பாளைப்பதுமநறுந்
தொடையாளையல்லதுமற்றினியாரைத்தொழுவதுவே. 19.

தொழுவார்வலம்வருவார்துதிப்பார்தந்தொழின்மறந்து
விழுவாரருமறைமெய்தெரிவாரின்பமெய்ப்புளகித்
தழுவாரினுங்கண்ணினீர்மல்குவாரென்கணுவதென்னை
வழுவாதசெஞ்சொற்கலைமங்கைபாலன்புவைத்தவரே. 20.

வைக்கும்பொருளுமில்வாழ்க்கைப்பொருளுமற்றெப்பொருளும்
பொய்க்கும்பொருளன்றிநீடும்பொருளல்லபூதலத்தின்
மெய்க்கும்பொருளுமழியாப்பொருளும்விழுப்பொருளும்
உய்க்கும்பொருளுங்கலைமாதுணர்த்துமுரைப்பொருளே. 21.

பொருளாலிரண்டும்பெறலாகுமென்றபொருள்பொருளோ
மருளாதசொற்கலைவான்பொருளோபொருள்வந்துவந்தித்
தருளாய்விளங்குமவர்க்கொளியாயறியாதவருக்
கிருளாய்விளங்குநலங்கிளர்மேனியிலங்கிழையே. 22.

இலங்குந்திருமுகமெய்யிற்புளகமெழுங்கண்கணீர்
மலங்கும்பழுதற்றவாக்கும்வலிக்குமனமிகவே
துலங்குமுறுவல்செயக்களிகூருஞ்சுழல்புனல்போற்
கலங்கும்பொழுதுதெளியுஞ்சொன்மாலைக்கருதினர்க்கே. 23.

பெருந்திருவுஞ்சயமங்கையுமாகியென்பேதைநெஞ்சில்
இருந்தருளுஞ்செஞ்சொல்வஞ்சியைப்போற்றினெல்லாவுயிர்க்கும்
பொருந்தியஞானந்தருமின்பவேதப்பொருளுந்தருந்
திருந்தியசெல்வந்தருமழியாப்பெருஞ்சீர்தருமே. 24.

முன்றுறையரையனார் செய்த

# பழமொழி.

கல்வியானாயகழிநுட்பங்கல்லார்முற்
சொல்லியநல்லவுந்தீயவாம்—எல்லாம்
இவர்வரைநாடதமரையில்லார்க்கு
நகரமுங்காடுபோன்றாங்கு. 1.

கேட்பாரைநாடிக்கிளக்கப்படும்பொருட்கண்
வேட்கையறிந்துரைப்பர்வித்தகர்—வேட்கையால்
வண்டுவழிபடரும்வாட்கண்ணாய்தோற்பது
கொண்டுபுகாஅரவை. 2.

புலமிக்கவரைப்புலமைதெரிதல்
புலமிக்கவர்க்கேபுலனாம்—நலமிக்க
பூம்புனலூரபொதுமக்கட்காகாதே
பாம்பறியும்பாம்பினகால். 3.

ஆஅமெனக்கெளிதென்றுலகமாண்டவன்
மேனந்துணையறியான்மிக்குநீர்ப்பெய்திழந்தான்
தோஒமுடையதொடங்குவார்க்கில்லையே
தாஅந்தரவாராநோய். 4.

மிக்குப்பெருகிமிகுபுனல்பாய்ந்தாலும்
உப்பொழிதல்செல்லாவொலிகடல்போல்—மிக்க
இனநலநன்குடையவாயினுமென்றும்
மனநலமாகாவாங்கீழ். 5.

தானட்டொழுகுதற்குத்தக்காரெனவேண்டா
யார்நட்பேயாயினுநட்புக்கொளல்வேண்டும்
கானட்டுநாறுங்கதுப்பினாய்தீற்றாதோ
நாய்நட்டானல்லமுயல். 6.

அங்கண்விசும்பினகனிலாப்பாரிக்கும்
திங்களுந்தீங்குறுதல்காண்டுமால்—பொங்கி
அறைப்பாயருவியணிமலைநாட
உறற்பாலயார்க்குமுறும். 7.

நண்பொன்றித்தம்மாலேநாட்டப்பட்டார்களைக்
கண்கண்டகுற்றமுளவெனினுங்காய்ந்தீயார்
பண்கொண்டதீஞ்சொற்பணைத்தோளாயாருளரோ
தங்கன்றுசாக்கறப்பார். 8.

உள்ளதொருவரொருவர்கைவைத்தக்கால்
கொள்ளும்பொழுதேகொடுக்கதாம்—கொள்ளார்
நிலைப்பொருளென்றதனைநீட்டிக்கல்வேண்டா
புலைப்பொருடங்காவெனி. 9.

தக்காரோடொன்றித்தமராயொழுகினார்
மிக்காராலென்றுசிறியாரைத்தாந்தேறார்
கொக்கார்வளவயலூரதினலாமோ
அக்காரஞ்சேர்ந்தமணல். 10.

கறுத்தாற்றித்தம்மைக்கடியசெய்தாரைப்
பொறுத்தாற்றிச்சேறல்புகழால்—ஒறுத்தாற்றின்
வானோங்குமால்வரைவெற்பபயமின்றே
தானோன்றிடவருஞ்சால்பு. 11.

உரைமுடிபுகாணானிளமையோனென்ற
நரைமுதுமக்களுவப்ப—நரைமுடித்துச்
சொல்லான்முறைசெய்தான்சோழன்குலவிச்சை
கல்லாமற்பாகம்படும். 12.

உரைத்தாரைமீதூராமீக்கூற்றம்பல்லி
நெரித்தசினைபோலுநீளிரும்புன்னைப்
பொரிப்பூவிதழுறைக்கும்பொங்குநீர்ச்சேர்ப்ப
நரிக்கூக்கடற்கெய்தாவாறு. 13.

அருமையுடையபொருளுடையார்தங்கட்
கருமமுடையாரைநாடார்—எருமைமேல்
நாரைதுயில்வதியுமூரகுளந்தொட்டுத்
தேரைவழிச்சென்றாரில். 14.

இசைவகொடுப்பதூஉமில்லென்பதூஉம்
வசையன்றுவையத்தியற்கையஃதன்றிப்
பசைகொண்டவனிற்கப்பாத்துண்ணாயின்
நசைகொன்றான்செல்லுலகமில். 15.

உரிதனிற்றம்மோடுழந்தமைகண்டு
பிரிவின்றிப்போற்றப்படுவார்—திரிவின்றித்
தாம்பெற்றதனாலுவவார்பெரிதகழ்ந்து
பாம்புகாண்பாருமுடைத்து. 16.

விடலரியதுப்புடையவேட்கையைநீக்கிப்
படர்வரியநன்னெறிக்கணின்றார்—இடருடைத்தாய்ப்
பெற்றவிடக்குநுகர்தல்கடனீந்திக்
கற்றடியுளாழ்ந்துவிடல். 17.

பரந்ததிறலாரைப்பாசிமேலிட்டுக்
கரந்துமறைக்கலுமாமோ—நிரந்தெழுந்த
வேயிற்றிரண்டதோள்வேற்கண்ணாய்விண்ணியங்கும்
ஞாயிற்றைக்கைமறைப்பாரில். 18.

மிக்குடையராகிமிகமதிக்கப்பட்டாரை
ஒற்கப்படமுயலுமென்றலிழுக்காகும்
நற்கெளிதாகிவிடினுநளிர்வரைமேற்
கற்கிள்ளிக்கையுய்ந்தாரில். 19.

வைத்ததனைவைப்பென்றுணரற்கதாமதனைத்
துய்த்துவழங்கியிருபாலும் — அத்தகத்
தக்குழிநோக்கியறஞ்செய்யினஃதன்றோ
எய்ப்பினில்வைப்பென்பது. 20.

உற்றானுறாஅனெனல்வேண்டாவொண்பொருளைக்
கற்றானைநோக்கியேகைவிடுக்க — கற்றான்
கிழவனுரைகேட்குங்கேளானெனினும்
இழவன்றெருதுண்டவுப்பு. 21.

பயனோக்காதாற்றவும்பாத்தறிவொன்றின்றி
இசைநோக்கியீகின்றாரீகை — வயமாப்போல்
ஆலித்துப்பாயுமலைகடற்றண்சேர்ப்ப
கூலிக்குச்செய்துண்ணுமாறு. 22.

மறந்தானுந்தாமுடையதாம்போற்றலன்றிச்
சிறந்தார்தமரென்றுதேற்றார்கைவையார்
கறங்குநீர்காலலைக்குங்கானலஞ்சேர்ப்ப
இறந்ததுபேர்த்தறிவாரில். 23.

நோவவுரைத்தாரைத்தாம்பொறுக்கல்லாதார்
நாவினொருவரைவைதால்வயவுரை
பூவிற்பொலிந்தகன்றகண்ணாயதுவன்றோ
தீயில்லையூட்டுந்திறம். 24.

ஆயிரவராலுமறிவில்லார்தொக்கக்கால்
மாயிருஞாலத்துமாண்பொருவன்போல்கலார்
பாயிருணீக்குமதியம்போற்பன்மீனுங்
காய்கலாவாகுநிலா. 25.

நிரைதொடிதாங்கியநீடோண்மாற்கேனும்
உரையொழியாவாகுமுயர்ந்தோர்கட்குற்றம்
மரையாகன்றூட்டுமலைநாடமாயா
நரையான்புறத்திட்டசூடு. 26.

வீங்குதோட்செம்பியன்சிற்றப் விறல்விசும்பில்
தூங்குமெயிலுந்தொலைத்தலால்—ஆங்கு
முடியுந்திறத்தான்முயல்கதாங்கூரம்
படியிழுப்பினில்லையரண். 27.

கற்றதொன்றின்றிவிடினுங்குடிப்பிறந்தார்
மற்றொன்றறிவாரின்மாண்மிக்கநல்லரால்
பொற்பவுரைப்பான்புகவேண்டாகொற்சேரித்
துன்னூசிவிற்பவரில். 28.

அல்லலொருவர்க்கடைந்தக்கான்மற்றவர்க்கு
நல்லகிளைகளெனப்படுவார்—நல்ல
வினைமரபின்மற்றதனைநீக்குமதுவே
மனைமரமாயமருந்து. 29.

ஆற்றவுங்கற்றாரறிவுடையாரஃதுடையார்
நாற்றிசையுஞ்செல்லாதநாடில்லையந்நாடு
வேற்றுநாடாகாதமவேயாமாயினால்
ஆற்றுணாவேண்டுவதில். 30.

எமக்குத்துணையாவார்வேண்டுமென்றெண்ணித்
தமக்குத்துணையாவார்த்தாந்தெரிதல்வேண்டா
பிறர்க்குப்பிறர்செய்வதொன்றுண்டோவில்லை
தமக்குமருத்துவர்தாம். 31.

நிரந்துவழிவந்தநீசருளெல்லாம்
பரந்தொருவர்நாடுங்காற்பண்புடையார்தோன்றார்
மரம்பயில்சோலைமலைநாடவென்றும்
குரங்கினுணன்முகத்தவில். 32.

முட்டின்றொருவருடையபொழுதின்கண்
அட்டிற்றுத்தின்பவராயிரவராபவே
கட்டலர்தார்மார்பகலியூழிக்காலத்துக்
கெட்டார்க்குநட்டாரோவில். 33.

ஆற்றுமிளமைக்கட்கற்கலான்மூப்பின்கட்
போற்றுமெனவும்புணருமோ—ஆற்றச்
சுரம்போக்கியுல்குகொண்டாரில்லையில்லை
மரம்போக்கிக்கூலிகொண்டார். 34.

உணற்கினியவின்னீர்பிறிதுழியில்லென்னுங்
கிணற்றகத்துத்தேரைபோலாகார்—கணக்கினை
முற்றப்பகலுமுனியாதினிதோதிக்
கற்றலிற்கேட்டலேநன்று. 35.

சிறியவரெய்தியசெல்வத்தின்மாணப்
பெரியவர்நல்குரவுநன்றே—தெரியின்
மதுமயங்குபூங்கோதைமாணிழாய்மோரின்
முதுநெய்தீதாதலோவில். 36.

வன்பாட்டவர்பகைகொள்ளினுமேலாயார்
புன்பாட்டவர்பகைகோடல்பயமின்றே
கண்பாட்டபூங்கழிக்கானலந்தண்சேர்ப்ப
வெண்பாட்டம்வெள்ளந்தரும். 37.

இளைரோங்கிவந்தாரையென்னுற்றக்கண்ணும்
உணர்பவரஃதேயுணர்ப—உணர்வார்க்
கணிமலைநாடவளருடிக்கண்ணும்
மணிமணியாகிவிடும். 38.

கோவாதசொல்லுங்குணனிலாமாக்களை
நாவாயடக்கலரிதாகும்—நாவாய்
களிகள்போற்றூங்குங்கடற்சேர்ப்பவாங்கி
வளிதோட்கெறிவாரோவில். 39

நாடிநமரென்றுநன்குபுரந்தாரைக்
கேடுபிறரொடுசூழ்தல்கிளர்மணி
நீடுகல்வெற்பநினைப்பின்றித்தாமிருந்த
கோடுகுறைத்துவிடல். 40

இதுமன்னுந்தீதென்றிசைந்ததூஉமாவார்க்
கதுமன்னுநல்லதேயாகும்—மதுமன்னும்
வீநாறுகானல்விரிதிரைத்தண்சேர்ப்ப
தீநாடிருவுடையார்க்கில். 41.

தெற்றப்பரிந்தொருவர்தீர்ப்பரெனப்பட்டார்க்
குற்றகுறையையுரைப்பதாம்—தெற்ற
அறையாரணிவளையாய்தீர்தலுறுவார்
மறையார்மருத்துவர்க்குநோய். 42.

பொலந்தாரிராமன்றுணையாகப்போதந்
திலங்கைகிழவற்கிளையான்—இலங்கைக்கே
பேர்ந்திறையாயதூஉம்பெற்றான்பெரியாரைச்
சார்ந்துகெழீஇலாரில். 43.

சாலமறைத்தோம்பிச்சான்றவர்கைகரப்பக்
காலைகழிந்ததன்பின்றையும்—மேலைக்
கறவைக்கன்றூர்ந்தானைத்தந்தையுமூர்ந்தான்
முறைமைக்குமூப்பிளமையில். 44.

நற்பாலகற்றாருநாடாதுசொல்லுவர்
இற்பாலரல்லாரியல்பின்மைநோவதென்
கற்பாலிலங்கருவிநாடமற்றியாரானுஞ்
சொற்பாலசோராதாரில். 45.

மாடமழிந்தக்கான்மற்றுமெடுப்பதோர்
கூடமரத்திற்குத்துப்பாகுமஃதேபோல்
பீடில்லாக்கண்ணும்பெரியார்பெருந்தகையர்
ஈடில்லதற்கில்லைபாடு. 46.

தழங்குகுரல்வானத்துத்தண்பெயல்பெற்றால்
கிழங்குடையவெல்லாமுளைக்குமோராற்றால்
விழைந்தவரைவேர்சுற்றக்கொண்டொழுகல்வேண்டா
பழம்பகைநட்பாதலில். 47.

அடங்கியகப்படைவந்திணைக்காத்துத்
தொடங்கியமுன்றிறன்பாண்டமண்—டைப்பொழியச்
செல்லும்வாய்க்கேமஞ்சிறுகாலைச்செய்தாரே
கொல்லைமேற்*கோட்டைவைத்தார். 48.

பரியப்படுபவர்பண்பிலாரேனுந்
திரியப்பெறுபவோசான்றோர்—விரிதிரை
பாரெறியுமுந்நீர்த்துறைவகடனன்றோ
ஊரறியநட்டார்க்குறை. 49.

சுடப்பட்டுயிருய்ந்தசோழன்மகனும்
பிடர்த்தலைப்பேரானைப்பெற்றுக்—கடைக்கால்
செயிரறுசெங்கோல்செலீஇயினானில்லை
உயிருடையாரெய்தாவினை. 50.

வாட்டிறலானைவளைத்தார்களஞ்ஞான்று
வீட்டியசென்றார்விளங்கொளி—காட்டப்
பொருவறுதன்மைகண்டஃதொழிந்தாரஃதால்
உருவுதிருவூட்டுமாறு. 51.

உள்ளூரவரானுணர்ந்தார்முதலெனினும்
எள்ளாமைவேண்டுமிலங்கிழாய்—தள்ளா
அழுங்கன்முதுபதியங்காடிபேயுர்
பழங்கன்றேறுதலுமுண்டு. 52.

நன்றேயொருவர்துணையுடைமைபாப்பிடுக்கண்
ஒன்றேயுயப்பார்ப்பான்கடைத்தலன்—விண்டோயுங்
குன்றகநன்னாடகூறுங்காவில்லையே
ஒன்றுக்குதவாதவொன்று. 53.

அகலமுடையவறிவுடையார்நாப்பட்
புகலறியார்புக்கவர்தாமே—இகலினால்
வண்சேர்ந்தபுன்சொல்விளம்பலதுவன்றே
பாண்சேரிப்பற்கிளக்குமாறு. 54.

தாயானுந்தந்தையாலானுமிகலின்றி
வாயின்மீக்கூறுமவர்களையேத்துதல்
நோயின்றெனினுமடுப்பின்கடைமுடங்கும்
நாயைப்புலியாமெனல். 55.

* கொட்டு-என்றும் பாடம்.

ஒற்கந்தாமுற்றவிடத்துமுயர்ந்தவர்
நிற்பவேநின்றநிலையின்மேல்—வற்பத்தால்
தன்மேனலியும்பசிபெரிதாயினும்
புன்மேயாதாகும்புலி. 56.

விலங்கேயுந்தம்மோடுடனுறைதன்மேவும்
கலந்தாரைக்கைவிடுதலொல்லா—இலங்கருவி
தாஅயிழியுமலைநாடவின்னாதே
பேதையொடானும்பிரிவு. 57.

தங்குற்றநீக்கலராகிப்பிறர்குற்றம்
எங்கெங்குந்தீர்த்தற்கிடைபுகுதல்—எங்கும்
வியனுலகில்வெள்ளாடுதன்வளிதீரா
தயல்வளிதீர்த்துவிடல். 58.

உரைசான்றசான்றோரொடுங்கியுறைய
நிரையுளரல்லார்நிமிர்ந்துபெருகல்
வரைதாழிலங்கருவிவெற்பவதுவே
சுரையாழவம்மிமிதப்பு. 59.

ஆற்றப்பெரியார்பகைவேண்டிக்கொள்ளற்க
போற்றாதுகொண்டரக்கன்போரினகப்பட்டான்
நோற்றபெருமையுடையாருங்கூற்றம்
புறங்கொம்மைகொட்டினாரில். 60.

தொன்மையின்மாண்டதுணிவொன்றுமில்லாதார்
நன்மையின்மாண்டபொருள்பெறுதல்—இன்னொலிநீர்
கன்மேலிலங்குமலைநாடமாக்காய்த்துத்
தன்மேற்குணில்கொள்ளுமாறு. 61.

தெரியாதவர்தந்திறனில்சொற்கேட்டால்
பரியாதார்போலவிருக்க—பரிவிலா
வம்பலர்வாயையவிப்பான்புகுவாரே
அம்பலந்தாழ்க்கூட்டுவார். 62.

திருநாவுக்கரசு சுவாமிகள் அருளிச்செய்த தேவாரம்.

# திரு அங்கமாலை.

---

தலையேநீவணங்காய், தலை-மாலை தலைக்கணிந்து
தலையாலேபலிதேருந்தலைவனைத், தலையேநீவணங்காய். 1.

கண்காள்காண்மின்களோ, கடல்-நஞ்சுண்டகண்டன்றன்னை
எண்டோள்வீசிநின்றாடும்பிரான்றன்னைக், கண்காள்... 2.

செவிகாள்கேண்மின்களோ, சிவன்-எம்மிறைசெம்பவள
எரிபோன்மேனிப்பிரான்றிறமெப்போதுஞ், செவிகாள்... 3.

மூக்கேநீமுரலாய், முது-காடுறைமுக்கணனை
வாக்கேநோக்கியமங்கைமணாளனை, மூக்கே... 4.

வாயேவாழ்த்துகண்டாய், மத-யானையுரிபோர்த்துப்
பேய்வாழ்காட்டகத்தாடும்பிரான்றன்னை, வாயே... 5.

நெஞ்சேநீநினையாய், நிமிர்-புன்சடைநின்மலனை
மஞ்சாடும்மலைமங்கைமணாளனை, நெஞ்சே... 6.

கைகாள்கூப்பித்தொழீர், கடி-மாமலர்தூவிநின்று
பைவாய்ப்பாம்பரையார்த்தபரமனைக், கைகாள்... 7.

ஆக்கையாற்பயனென், அரன்-கோயில்வலம்வந்து
பூக்கையாலட்டிப்போற்றியென்னாதவிவ், ஆக்கை... 8.

கால்களாற்பயனென், கறைக்-கண்டனுறைகோயில்
கோலக்கோபுரக்கோகரணஞ்சூழாக், கால்... 9.

உற்றாராருளரோ, உயிர்-கொண்டுபோம்பொழுது
குற்றாலத்துறைகூத்தனல்லானமக், குற்றார்... 10.

இறுமாந்திருப்பன்கொலோ, ஈசன்-பல்கணத்தெண்ணப்பட்டுச்
சிறுமானேந்திதன்சேவடிக்கீழ்ச்சென்றங்-கிறுமாந்திருப்பன்
கொலோ. 11.

## குலசேகரப்பெருமாள் அருளிச்செய்த திருமொழி.

# 10-ம் திருமொழி.

அங்கணெடுமதிள்புடைசூழயோத்தியென்னும்
அணிநகரத்துலகனைத்தும்விளக்குஞ்சோதி
வெங்கதிரோன்குலத்துக்கோர்விளக்காய்த்தோன்றி
விண்முழுதுமுயக்கொண்டவீரன்றன்னைச்
செங்கணெடுங்கருமுகிலையிராமன்றன்னைத்
தில்லைநகர்த்திருச்சித்ரகூடந்தன்னுள்
எங்கடனிமுதல்வனையெம்பெருமான்றன்னை
என்றுகொலோகண்குளிரக்காணுநாளே. 1.

வந்தெதிர்ந்ததாடகைதனுரத்தைக்கீறி
வருகுருதிபொழிதரவன்கணையொன்றேவி
மந்திரங்கொள்மறைமுனிவன்வேள்விகாத்து
வல்லரக்கருயிருண்டமைந்தன்காண்மின்
செந்தளிர்வாய்மலர்நகைசேர்செழுந்தண்சோலைத்
தில்லைநகர்த்திருச்சித்ரகூடந்தன்னுள்
அந்தணர்களொருமூவாயிரவரேத்த
அணிமணியாசனத்திருந்தவம்மான்றானே. 2.

செவ்வரிநற்கருநெடுங்கட்சீதைக்காகச்
சினவிடையோன்சிலையிறுத்துமழுவாளேந்தி
வெவ்வரிநற்சிலைவாங்கிவென்றிகொண்டு
வேல்வேந்தர்பகைதடிந்தவீரன்றன்னைத்
தெவ்வரஞ்சுநெடும்புரிசையுயர்ந்தபாங்கர்த்
தில்லைநகர்த்திருச்சித்ரகூடந்தன்னுள்
எவ்வரிவெஞ்சிலைத்தடக்கையிராமன்றன்னை
இறைஞ்சுவாரிணையடியேயிறைஞ்சினேனே. 3.

தொத்தலர்பூஞ்சுரிகுழற்கைகேசிசொல்லால்
தொன்னகரந்துறந்துதுறைக்கங்கைதன்னைப்
பத்தியுடைக்குகன்கடத்தவனம்போய்ப்புக்குப்
பரதனுக்குப்பாதுகமுமரசுமீந்து
சித்திரகூடத்திருந்தான்றன்னையின்று
தில்லைநகர்த்திருச்சித்ரகூடந்தன்னுள்
எத்தனையுங்கண்குளிரக்காணப்பெற்ற
இருநிலத்தார்க்கிமையவர்நேரொவ்வார்தாமே. 4.

வலிவணக்குவரைநெடுந்தோள்விராதைக்கொன்று
வண்டமிழ்மாமுனிகொடுத்தவரிவில்வாங்கிக்
கலைவணக்குநோக்கரக்கிமூக்கைநீக்கிக்
கரனோடுதூடணன்றனுயிரைவாங்கிச்
சிலைவணக்கிமான்மறியவெய்தான்றன்னைத்
தில்லைநகர்த்திருச்சித்ரகூடந்தன்னுள்
தலைவணக்கிக்கைகூப்பியேத்தவல்லார்
திரிதலால்தவமுடைத்துத்தரணிதானே. 5.

தனமருவுவைதேகிபிரியலுற்றுத்
தளர்வெய்திச்சடாயுவைவைகுந்தத்தேற்றி
வனமருவுகவியரசன்காதல்கொண்டு
வாலியைக்கொன்றிலங்கைநகரரக்கர்கோமான்
சினமடங்கமாருதியாற்சுடுவித்தானைத்
தில்லைநகர்த்திருச்சித்ரகூடந்தன்னுள்
இனிதமர்ந்தவம்மானையிராமன்றன்னை
யேத்துவாரிணையடியேயேத்தினேனே. 6.

குரைகடலையடலம்பால்மறுகவெய்து
குலைகட்டிமறுகரையையதனாலேறி
எரிநெடுவேலரக்கரொடுமிலங்கைவேந்தன்
இன்னுயிர்கொண்டவன்றம்பிக்கரசுமீந்து
திருமகளோடினிதமர்ந்தசெல்வன்றன்னைத்
தில்லைநகர்த்திருச்சித்ரகூடந்தன்னுள்
அரசமர்ந்தானடிசூடுமரசையல்லால்
அரசாகவெண்ணேன்மற்றரசுதானே. 7.

அம்பொனெடுமணிமாடவயோத்தியெய்தி
அரசெய்தி அகத்தியன்வாய்த்தான்முன் கொன்றான்
தன்பெருந்தொல்கதைகேட்டு மிதிலைச்செல்வி
உலகுய்யத்திருவயிறுவாய்த்தமக்கள்
செம்பவளத்திரள்வாய்த்தன்சரிதைகேட்டான்
தில்லைநகர்த்திருச்சித்ரகூடந்தன்னுள்
எம்பெருமான்றன்சரிதைசெவியால்கண்ணால்
பருகுவோமின்னமுதமதியோமன்றே. 8.

செறிதவச்சம்புகன்றன்னைச்சென்றுகொன்று
செழுமறையோனுயிர்மீட்டுத்தவத்தோனீந்த
நிறைமணிப்பூணணியுங்கொண்டிலவணன்றன்னைத்
தம்பியால்வானேற்றிமுனிவன்வேண்டத்
திறல்விளங்குமிலக்குமனைப்பிரிந்தான்றன்னைத்
தில்லைநகர்த்திருச்சித்ரகூடந்தன்னுள்
உறைவானைமறவாதவுள்ளந்தன்னை
உடையோம்மற்றுறுதுயரமடையோமன்றே. 9.

அன்றுசராசரங்களைவைகுந்தத்தேற்றி
அடலரவப்பகையேறியசுரர்தம்மை
வென்றிலங்குமணிநெடுந்தோள்நான்குந்தோன்ற
விண்முழுதுமெதிர்வரத்தன்தாமமேவிச்
சென்றினிதுவீற்றிருந்தவம்மான்றன்னைத்
தில்லைநகர்த்திருச்சித்ரகூடந்தன்னுள்
என்றுநின்றானவனிவனென்றேத்திநாளும்
இறைஞ்சுமினோவெப்பொழுதுந்தொண்டீர்நீரே. 10.

தில்லைநகர்த்திருச்சித்ரகூடந்தன்னுள்
திறல்விளங்குமாருதியோடமர்ந்தான்றன்னை
எல்லையில்சீர்த்தயரதன்றன்மகனாய்த்தோன்றிற்
றதுமுதலாத்தன்னுலகம்புக்கதீறாக்
கொல்லியலும்படைத்தானைக்கொற்றவொள்வாள்
கோழியர்கோன்குடைக்குலசேகரன்சொற்செய்த
நல்லியலின்தமிழ்மாலைபத்தும்வல்லார்
நலந்திகழ்நாரணனடிக்கீழ்நண்ணுவாரே. 11.

# ஸிம்பலீன் மகாராஜன் கதை.

அகஸ்தஸ் ஸீஸர் ரோமாபுரியில் ராஜ்யபரிபாலனஞ் செய்கையில் அக்காலத்தில் பிரித்தனென்று பேர்வழங்கிய இங்கிலாந்தில் ஸிம்பலீன் என்னும் ஓர் அரசனிருந்தான்.

அவனுக்கு ஒரு பெண்ணும் இரண்டு பிள்ளைகளும் இருந்தார்கள். இம்மூவரும் குழந்தைகளாயிருக்கையிலேயே ஸிம்பலீனுடைய முதல்மனைவியாகிய அவர்கள் தாய் இறந்துபோனாள். அம்மூவரில் மூத்தகுழந்தையாகிய இமோஜன் என்பவள் தன் தகப்பன் அரமனையிலேயே வளர்ந்துவந்தாள். மற்றிரண்டு பிள்ளைகளில் பெரியவன் மூன்று வயதாயும், இளையவன் பச்சைப்பாலகனாயும் இருக்கையில், அவர்களைத் தாதிகளிடத்திலிருந்து ஒருவருக்கும் தெரியாமல் யாரோ திருடிக்கொண்டு போய்விட்டார்கள். ஆகையால், அவர்கள் இன்னகதியானார்களென்றும், அவர்களைத் திருடிக்கொண்டு போனவர் இன்னாரென்றும் ஸிம்பலீனுக்குத் தெரியாமற்போய்விட்டது.

ஸிம்பலீன் மறுபடியும் விவாகஞ்செய்துகொண்டவள் வெகு கொடியவளாயும் குடிகெடுக்கும் யுக்திகளைச் செய்பவளாயும் இருந்ததனால், இமோஜனைச் சிறுமாறாய் நடத்திவந்தாள். அவளும் முதல் ஒருவனை விவாகஞ்செய்து அவன் இறந்தபிறகு ஸிம்பலீனை மணந்துகொண்டவள். அம்முதற்கணவனுக்கு அவள் பெற்ற க்ளோடன் என்னும் ஓர் புதல்வனிருந்தான். அவள், "என் கணவனுடைய முதல்மனைவி பிள்ளைகளோ காணாமற்போய்விட்டார்கள்; அவர்கள் அகப்படாதபக்ஷத்தில் ராஜகுமாரத்தியாகிய இமோஜன் அல்லவோ பட்டத்திற்குரியவள்; ஆகையால் அவளைக் க்ளோடனுக்குக் கட்டிக்கொண்டால் ஸிம்பலீன் இறந்தபிறகு பிரித்தன் நாட்டிற்கு அவனையே அரசனாக்கி மகுடஞ்சூட்டலாம்" என்று நினைத்து, இமோஜனிடத்தில் தனக்கு

அதிக துவேஷமிருந்தும் அவளைத் தன் மகனுக்கு விவாகஞ்செய்து கொள்ளவேண்டுமென்றிருந்தாள். ஆனால் இமோஜன் தன் தகப்பனுக்கும் சிறிய தாய்க்கும் தெரியாமலும், அவர்கள் சம்மதியில்லாமலும் வேறொருவனை விவாகஞ்செய்துகொண்டதனால் மகாராணியின் எண்ணம் ஈடேறாமல் போய்விட்டது.

இப்படி இமோஜன் விவாகஞ்செய்து கொண்டவன் அக்காலத்தில் இணையற்ற பண்டிதனென்றும் எல்லா விஷயத்திலும் சிறந்த பெரியமனிதனென்றும் பேர்பெற்றவன். அவன் தன் தந்தை ஸிம்பலீனுக்காக யுத்தத்தில் மாய்ந்துபோனபின் பிறந்தவன்; அதனால் ஸிம்பலீன் அவனுக்கு போஸ்துமு என்று பேரிட்டான். அவன் தாயும் கணவன் மடிந்த விசனத்தினால் இறந்து போனாள். இப்படி அநாதையாய் இருக்கும் அக்குழந்தையை ஸிம்பலீன் கருணையோடெடுத்துத் தன் அரமனையிலேயே வளர்த்து, படிப்புமுதலியனவையெல்லாம் கற்பித்தான். இமோஜனும் போஸ்துமுவும் ஒன்றாய் விளையாடி ஒரே வாத்தியாரிடத்தில் படித்ததனால் குழந்தைகளாயிருக்கையிலேயே ஒருவர்மீதொருவர் மிக்க அன்புற்று நாளுக்குநாள் பிரீதி முதிர்ந்து பருவம் வந்தவுடனே ரகசியமாய் விவாகஞ்செய்துகொண்டார்கள். இமோஜன் செய்வதையெல்லாம் ரகசியமாய்த் தெரிந்து சொல்லும்படி தான் ஏற்படுத்திய வேவுகாரர்களால் மகாராணி இச்சங்கதியையறிந்ததும் வெகு குரோதமடைந்து, உடனே அதை மகாராஜனுக்குத் தெரிவித்தாள். மேலான தன் அந்தஸ்தை முற்றும் மறந்து சாதாரண பிரஜைகளில் ஒருவனாயிருந்த போஸ்துமுவை மகள் மணந்து கொண்டாளென்று கேள்விப்பட்டதும் ஸிம்பலீன் உக்கிர கோபத்துடன் போஸ்துமுவைப்பார்த்து: "அடா போஸ்துமுவே, நீ இப்பிரித்தன் நாட்டை விட்டு ஓடிப்போ, என்றைக்கும் இவ்வழி திரும்பிப்பாராதே" எனக் கட்டளையிட்டான்.

இதைக்கேட்டு ரோமாபுரியில் தன் நாளைக் கழிப்பதாக நிச்சயித்துப் போஸ்துமு புறப்படவிருக்கையில், அவள் விவாகம் அரசன் அனுமதியின்றிச் செய்துகொண்டதனால் அதைச் சட்டப்படி ஸ்தாபிக்கமுடியாதென்றும், தன் மகனாகிய க்ளோடனை மறுபடியும் விவாகஞ்செய்து கொள்ளலாமென்றும், போஸ்துமு

போனபின்பு அவளுக்குப் போதித்து மனதைக் கலக்கவேண்டு மென்று எண்ணியிருந்த மகாராணி இமோஜன் கணவனை இழக்க நேரிட்டதைப்பற்றி வெகு பரிதாபப்படுகிறவள்போற் காட்டி "அம்மா, உன் கணவன் ரோமாபுரிக்குப் போவதற்குமுன் அவனை நீ ரகசியமாய்ப் பார்க்கும்படி நான் ஏற்பாடு செய்கிறேன்; அஞ்சாதே" என்றாள். அப்படியே இமோஜனும் போஸ்துமுவும் வெகு பிரீதியோடு செலவு பெற்றுக்கொள்ளச் சந்தித்தார்கள். தன் தாயார் கொடுத்த ஒரு வைரமோதிரத்தை இமோஜன் கணவனுக்குக் கொடுத்தாள். அதைப் போஸ்துமு வாங்கிக்கொண்டு, "இதை நான் என்றென்றைக்கும் என்னிடத்திலேயே வைத்துக்கொண்டிருப்பேன்" என்று தன்னிடத்திலிருந்த கைக்காப்பொன்றைத் தன் மனைவிகையிற் போட்டு, "நான் உன்னிடத்தில் வைத்திருக்கிற அன்புக்கு அடையாளமாக இதைத் தந்தேன்; நீ இதைப் பத்திரமாய்க் காப்பாற்றவேண்டியது" என்றான். உடனே அவர்கள் என்றென்றைக்கும் தங்களுக்கு உள்ள அன்பையும் நம்பிக்கையையும் மறப்பதில்லையென்று பலவாறு உறுதிமொழிகளைக் கூறிக்கொண்டே பிரிந்தார்கள்.

பின்பு இமோஜன் ஒருவரோடும் சேராமல் வெகு விசனப்பட்டுக்கொண்டு தன் தகப்பன் அரமனையிலிருந்தாள். போஸ்துமு தான் எண்ணியவண்ணம் ரோமாபுரி சேர்ந்தான். அங்கே வினோதார்த்தம் சில வாலிபர்கள் பல தேசங்களிலிருந்தும் வந்திருந்தார்கள். இவர்கள் ஸ்திரீகளைப்பற்றித் தாராளமாய்ப் பேசுகிறவர்கள். அன்றியும் அவர்களில் ஒவ்வொருவரும் தம் தேசத்துப் பெண்களையே விசேஷமாய்ச் சொல்லி அவர்களிலும் தங்கள் தங்கள் நாயகிகளே இணையற்றவர்களென்று புகழ்ந்தார்கள். தன் பிரியமான மனைவியை எப்பொழுதும் மனதில் நினைத்துக்கொண்டிருந்த போஸ்துமு அவர்கள் சமூகத்திற் சேர்ந்து, ஒருநாள் வெகு ரூபவதியாகிய தன் மனைவி இமோஜன் எல்லாரிலும் மேலான சீலமும் விவேகமும் பதிவிரதாதருமமும் உள்ளவள் என்றான்.

அந்தச்சமூகத்தில் ஒருவனாகிய அயாகிமன் என்பவன் ரோமாபுரியாகிய தன் ஊரில் உள்ள ஸ்திரீகள் எல்லாரிலும் பிரித்தன்

தேசத்துப் பெண்ணாகிய இமோஜனைப் போஸ்துமு மேன்மையாகச் சொன்னதைக்கேட்டுக்கோபங்கொண்டு போஸ்துமுவைப்பார்த்து, "உன் மனைவியை நீ இப்படிப் புகழ்ந்தபோதிலும் அவள் அப்படிப் பட்ட பதிவிரதையென்று நான் நம்பமாட்டேன்" என்றான். அதைக் கேட்டுப் போஸ்துமு கோபங்கொண்டான். அப்புறம் அவ்விரு வருக்கும் நெடுநேரம் வாக்குவாதம் நடக்க, அயாகிமன், "நல்லது, நான் பிரித்தன் தேசத்துக்குப்போய் உன் மனைவி இமோஜனு டைய பிரீதியைச் சம்பாதிக்கப் பிரயத்தினப்படுவேன்" என்றான். அதற்குப் போஸ்துமு அப்படியா, ஆகட்டும் என்று அயாகிமனைப் பார்த்து, "அப்பா அயாகிமனே, உன் கொடிய எண்ணம் ஈடேறு மற்போனால் எனக்குப் பெருந்தொகையான பணம் கொடுக்க வேண்டும்" என்றும், "நீ சொல்லுகிறபடியே இமோஜனுடைய தயவை அடைந்து, நான் என் பிரீதிக்கு ஓர் அடையாளமாக வைத் துக்கொண்டிருக்கும்படி சொல்லிக்கொடுத்த கங்கணத்தை அவ ளிடமிருந்து பெற்றுக்கொள்வாயாகில், அவள் எனக்கு அன்போடு தந்த இம்மோதிரத்தை உனக்கு நான் கொடுத்துவிடுகிறேன்" என்றும் சொல்லி, இருவரும் சபதம் போட்டுக்கொண்டார்கள். போஸ்துமுவுக்கு இமோஜனிடத்தில் விசேஷ நம்பிக்கையிருந்தத னால் இவ்வாறு அவளுடைய பதிவிரதாதர்மத்தைப் பற்றிப் பரீக்ஷை பார்ப்பதில் யாதொரு அபாயமும் நேரிடாதென்று உறு தியாய் எண்ணியிருந்தான்.

அயாகிமன் தன் சபதப்படியே பிரித்தன் தேசத்துக்குப் போய், "உன் கணவனுக்கு நான் உற்ற நண்பன்" என்று இமோஜ னுக்குத் தெரிவிக்க, அவள் அதைக்கேட்டு அவனை உள்ளே அழை த்துவரச்சொல்லி வெகு மரியாதைசெய்தாள்; ஆனால் அயாகிமன் அவளுக்கேற்காத பேச்சுப் பேசத்தலைப்பட்டவுடனே அவனை மிகவும் அசட்டைசெய்து துரத்திவிட்டாள். இதனால் தன்னுடைய அந்தரங்கமான எண்ணம் ஈடேறுவது அசாத்தியமென்று அவன் உடனே தெரிந்துகொண்டான்.

அப்படியிருந்தும், தான் பந்தயத்தைக் கெலிக்கவேண்டுமெ ன்னும் அவாவை நிறைவேற்றும்படி ஒரு உபாயஞ்செய்தான் அதாவது, இமோஜனுடைய வேலைக்காரர்களில் சிலருக்கு லஞ்சங்

கொடுத்து அவர்கள் தன்னை ஒரு பெட்டியில்வைத்து மறைத்துத் தூக்கிக்கொண்டுபோய் அவளுடைய படுக்கையறையில் வைக்கும்படி செய்து, இமோஜன் படுத்து நன்றாய்த் தூங்குகிறவரையில் பெட்டிக்குள்ளிருந்தான். அப்புறம் அதைத் திறந்துகொண்டு வெளியே வந்து மிகவும் கவனமாய் அவ்வறைமுழுதும் சோதித்து அதில் தான் கண்டவற்றையெல்லாம் எழுதிக்கொண்டான். அன்றியும் இமோஜனுடைய கழுத்தில் இருந்த ஒரு மச்சத்தைக் கண்டு அதை முக்கியமாய் ஞாபகத்தில் வைத்துக்கொண்டு, அவள் கையில் போட்டுக்கொண்டிருந்த கங்கணத்தை மெதுவாய்க் கழற்றிக்கொண்டு மறுபடியும் பெட்டிக்குள் புகுந்துகொண்டான். மறுநாள் ரோமாபுரிக்கு அதிசீக்கிரத்தில் பிரயாணப்பட்டுப்போய்ப் போஸ்துமுவைப்பார்த்து "இமோஜனை நான் பார்த்தேன்; அவள் பள்ளியறைப்பித்திகை வெள்ளியினாலும் பட்டினாலும் செய்த சித்திரத் தொங்கல்களால் அலங்கரிக்கப்பட்டிருக்கிறது; அவற்றில் எழுதியிருந்த சித்திரமோ வெகு விநோதமாயிருக்கிறது" என்று சொன்னான்.

இதைப் போஸ்துமு கேட்டு, "அது சரிதான்; ஆனால் அதைப் பாராமலே யாராவது சொல்லக் கேட்டிருப்பாய்" என்றான்.

அயாகிமன் "அன்றியும் அவ்வறையில் குளிர்காயும் நெருப்பறைக்குப் புகைக்கூண்டு தென்னண்டையில் கட்டியிருக்கிறது; அப்புகைக்கூண்டிற்கு அடியில் தியானா என்னும் தேவதை ஸ்நானம் பண்ணுவதைப்போல் செதுக்கியிருக்கிறது; அந்தச் சித்திரத்திலுள்ள பொம்மைகளைக்காட்டிலும் சிங்காரமான உருவங்களை நான் எங்கும் பார்த்ததில்லை" என்றான்.

அதற்கும் போஸ்துமு "இதைப்பற்றியும் நீ கேள்விப்பட்டிருக்கலாம்; அந்தச் சித்திரத்தைப் பற்றி எல்லோரும் பிரசித்தமாய்ப் பேசுவார்கள்" என்றான்.

அப்புறம் அயாகிமன், "அவ்வறையின் மேல்தளத்தை விவரமாய் வர்ணித்து, ஓகோ! நான் மறந்துபோய்விட்டேன், அவ்வறையில் குளிர்காயும் அடுப்புக்கு முன்னிருக்கின்ற கம்பிகளில் கண்

கொட்டும் மன்மதனைப்போல் வெள்ளியால் செய்த இரண்டு பொம் மைகள் ஒற்றைக்காலில் நின்றுகொண்டிருக்கின்றன" என்று சொல்லி அப்புறம் கங்கணத்தை எடுத்து: "ஐயா, உங்களுக்கிந்த ஆபரணம் தெரியுமா? இதை அவள் தன்கையிலிருந்து கழற்றி எனக்குக் கொடுத்தாள்; அவள் இன்னும் என் கண்முன் நிற்கிறது போலிருக்கிறது; அவள் இதைக்கொடுத்தது பெரிதல்ல, அதைக் கழற்றிய விதமும் கொடுத்த மாதிரியுமே பெரிது" என்று சொல்லி, அவள் கழுத்திலிருந்த மச்சத்தையும் விவரித்தான்.

அயாகிமன் கபடத்தோடு சொல்லிக்கொண்டுவந்த இக்கதை யைப் போஸ்துமு கேட்கக் கேட்கச் சந்தேகத்தினால் மனந் துடித்துக் கோபவசத்தனாய் இமோஜனைப் பலவாறு வாய்விட்டுப் பேசினான். அவனிடத்திலிருந்து கங்கணத்தைப் பெறும்பட்சத் தில் தான் கொடுத்துவிடுவதாக ஒத்துக்கொண்ட வைரமோதி ரத்தை அயாகிமனுக்குக் கொடுத்துவிட்டான்.

தன் மனைவியின் துர்நடத்தையைப்பற்றித் தனக்கு உண்டா னகோபத்தினால் போஸ்துமு இமோஜனுடைய அரமனையில் உயர் ந்த ஏவலாட்களில் ஒருவனும், தனக்கு நெடுநாள் நம்பிக்கை யுள்ள சிநேகிதனுமிருந்த பிசானியன் என்னும் பிரித்தன் தேசத் தானுக்குக் கடிதமெழுதி, அதில் தன் மனைவி தனக்குச்செய்த துரோகங்களையெல்லாம் தெரியப்படுத்தி, வேல்ஸ்நாட்டின் சமுத் திரக்கரையிலிருக்கும் மில்போர்ட் ஏவன் என்னும் ஓர் நகரத்திற்கு இமோஜனை அழைத்துக்கொண்டுபோய்க் கொலைசெய்துவிடும்படி அவனைக்கேட்டுக்கொண்டான். அதனோடு இமோஜனுக்கும் ஓர் கடிதமெழுதி, "பெண்ணே, நான் பிரித்தன் நாட்டுக்குவந்தால் கொல்வதாக மகாராஜன் என்னைத் தடுத்திருக்கிறான்; ஆயினும் உன்னைப்பாராமல் இனிமேல் அரைநொடியும் நான் பிழைக்கேனாகை யால், மில்போர்ட் ஏவன் என்னும் இடத்திற்கு நான் வருகிறேன்; அவ்விடத்திற்கு நீயும் வந்து என்னைச் சந்திக்கவேண்டியது" என்று தன் கருத்தை மறைத்துச் சொன்னான். எல்லாவற்றினும் தன் கணவனிடத்தில் அன்புவைத்து அவனைப் பார்க்கும் விஷயத்தில் தன்னுயிரிடத்தில் இருக்கும் பிரீதியைக்காட்டிலும் மேலான ஆவ லுள்ள அவ்வுத்தமி எள்ளளவும் ஐயமின்றித் தனக்குக் கடிதம்

வந்த ராத்திரியே பிசானியனை அழைத்துக்கொண்டு புறப்பட்டு வெகு வேகமாய்ச் சென்றாள்.

மில்போர்ட் ஏவன் என்னும் இடத்திற்குச் சமீபமாய்ப் போய்க் கொண்டிருக்கையில், போஸ்துமுவுக்கு நம்பிக்கையுள்ளவனாயிருந்தபோதிலும், அவன் சொன்னபடி இப்படிப்பட்ட கொலைபாதகத்தைச் செய்யச் சற்றும் இஷ்டமில்லாத பிசானியன் இமோஜனைப் பார்த்து "அம்மா, உன்னைக் கொன்றுவிடும்படி உன் கணவன் எழுதியிருக்கிறான்" என்று சங்கதியைச் சொன்னான்.

தன்னிடத்தில் வெகு அன்புள்ளவனாயும் தன்னால் அதிக பிரீதி வைக்கப்பட்டவனாயும் இருக்கும் தன் கணவனைக் கண்டு மகிழ்வதற்கு மாறாக அக்கணவன் தன்னைக் கொல்லும்படி கட்டளையிட்டதைக் கேட்டவுடனே இமோஜனுக்கு வாயினாற்சொல்ல முடியாத விசனமுண்டாய்விட்டது.

பிசானியன் அவளைப் பார்த்து, "அம்மா, பயப்படவேண்டாம்; தான் செய்தது அநீதியென்று போஸ்துமு அறிந்து விசனப்படும் வரையில் தைரியத்தோடு பொறுத்துக்கொண்டிரு, அதுவரையில் இந்தச் சங்கடத்தோடு மறுபடியும் தகப்பனார் வீட்டுக்குப் போக மாட்டேன் என்கிறாயாகையால், க்ஷேமமாய்ப் பிரயாணம் செய்யும் பொருட்டு ஆண்பிள்ளை வேஷம் போட்டுக்கொண்டால் நல்லது" என்றான். அப்படியே செய்வதாக இமோஜன் ஒத்துக்கொண்டு, தனக்கு மிகுந்த கொடுமைசெய்திருந்தும் அவனிடத்திலுள்ள பிரீதியை மறக்கமுடியாமையால் அவ்வேஷத்துடனே ரோமாபுரிக்குப் போய்த் தன் கணவனைப் பார்க்கவேண்டுமென்று நினைத்தாள்.

இவ்வாறு பிசானியன் இமோஜனுக்கு மாறுவேஷம்போட்டு விட்டுத் தான் அரமனைக்குப் போகவேண்டிய அவசரத்தினால் விதி வசப்படி நடக்கிறது நடக்கட்டுமென்று அவளை விட்டுவிட்டுப் போனான்; ஆயினும் அவன் போவதற்குமுன் சகல வியாதிகளுக்கும் திவ்வியமான மருந்தென்று மகாராணி தனக்குக் கொடுத்த ஓர் திராவகச் சீஸாவை இமோஜனுக்குக் கொடுத்தான்.

இமோஜனுக்கும் போஸ்துமுவுக்கும் பிசானியன் வேண்டியவனாதலால் அவனிடத்தில் பகைகொண்டு அதிலிருந்தது நஞ்

சென்று நினைத்து, இச்சிமிழை மகாராணி அவனுக்குக் கொடுத்
தாள்; ஆனால் அவள் பிசானியனுக்கு நஞ்சு கொடுக்கும் எண்ணத்
துடன் தன் வைத்தியனைப் பார்த்து, “ஐயா, நஞ்சு கொல்லும் என்
கிறார்களே, அதை நான் சில மிருகங்களுக்குக் கொடுத்துப் பரீ
க்ஷைபார்க்கவேண்டும்; ஏதோ கொஞ்சம் நஞ்சு கொண்டுவாரும்”
என்று கட்டளையிட்டபொழுது, வைத்தியன், அவளுடைய
கொடிய குணத்தை நன்றாய் அறிந்தவனாகையால் உண்மையான
நஞ்சை அவள் கையில் கொடுக்காமல், சில மணிநேரம் இறந்தவர்
களுக்குரிய எல்லாக் குறிகளோடும் தூங்கச்செய்வதும், வேறொரு
கெடுதியும் செய்யாததுமான ஓர் மருந்தைக் கொண்டுவந்து அவ
ளிடத்தில் கொடுத்தான். அதை வெகு மேன்மையான திராவக
மென்று பிசானியன் நினைத்து வாங்கிக்கொண்டதினால் அதை
இமோஜனுக்குக் கொடுத்து, “அம்மா, வழியில் உடம்பு அநுகூல
மில்லாமற்போனால் இதைச் சாப்பிடுங்கள்” என்று அவளுக்குப் பல
வாறு ஆசீர்வாதம் செய்து கொடுத்து, ஒரு பாவமும் அறியாமல்
இருக்கும்பொழுதே அவ்வுத்தமிக்கு நேரிட்ட அடாத பழிகளி
னின்றும் அவளை க்ஷேமமாயும் சந்தோஷமாயும் விடுவிக்கவேண்டு
மென்று கடவுளைப் பிரார்த்தனைசெய்துகொண்டே அவ்விடத்தை
விட்டுப் போனான்.

அப்புறம் இமோஜனுக்குத் தெய்வந்துணைநின்று பாலகர்க
ளாய் இருக்கும்பொழுதே திருடிக்கொண்டு போகப்பட்ட தன்
இரண்டு தம்பிமார்களும் இருக்குமிடத்துக்குப் போகும்வழியைக்
காட்டிற்று. அவ்விரண்டு குழந்தைகளையும் திருடிக்கொண்டுபோன
பலாரியன் என்பவன் ஸிம்பலீன் மகாராஜனுடைய சமஸ்தானத்
தின் பிரபுக்களில் ஒருவன். அவன்பேரில் ராஜதுரோகஞ்செய்த
தாகச் சிலர் வீணாய் மகாராஜனுக்குப் பொய்சொன்னதனால் அச்
சமஸ்தானத்திலிருந்து துரத்தப்பட்டான். அதன்மேல் அவன் பகை
தீர்த்துக்கொள்ளும்பொருட்டு ஸிம்பலீன் மகாராஜனுடைய புத்
திரர்கள் இருவரையும் திருடிக்கொண்டுபோய் ஓர் வனத்திலுள்ள
குகையொன்றில் மறைந்து வாசஞ்செய்துகொண்டே அவர்களை
யும் வளர்த்துவந்தான். இப்படி அவன் பகைதீர்த்துக் கொள்
ளும்பொருட்டு இவர்களைத் திருடிக்கொண்டு போனபோதிலும்,
கொஞ்சக்காலத்திற்குள் தன் குழந்தைகளைப்போலவே அவர்களி

டத்திலும் அன்புவைத்து வெகு ஜாக்கிரதையோடு அவர்களுக்குக் கல்விமுதலிய பயிற்சிகளைச் செய்வித்தான். அவர்களும் நல்ல யவ்வன புருஷர்களாய் ராஜகுமாரர்களுக்குரிய குணங்களையுடையவர்களாகித் தைரியமும் பராக்கிரமமும் உள்ள காரியங்களைச் செய்துகொண்டிருந்தார்கள். அவர்கள் வேட்டையாடி ஜீவித்துக் கொண்டிருந்தார்களாகையால் வெகு சுறுசுறுப்பும் பலமும் அடைந்து, தகப்பனென்று நினைத்திருந்த பலாரியனை "நாங்கள் யுத்தங்களுக்குப் போய்க் கீர்த்தி அடையவேண்டும்; ஆகையால் எங்களுக்கு விடை கொடுத்தனுப்பும்" என்று இடைவிடாமல் உறுத்திக் கேட்டுக்கொண்டிருந்தார்கள். இச்சிறுவர்கள் வாசஞ்செய்து கொண்டிருந்த குகைக்கு அதிர்ஷ்டத்தினால் இமோஜன் போய்ச்சேர்ந்தாள். அது எப்படியெனில், மில்போர்ட் ஹேவன் என்னும் இடத்திற்குப் போகும்வழியில் ஓர் பெருங்காட்டில் வழி தப்பித் திகைத்துப் பணங்கொடுத்துச் சாப்பிடத்தக்க இடம் எங்கும் காணாமையால் அலுப்பினாலும் பசியினாலும் பிராணன் போகும் தருணமாயிருந்தது. வெகுசெல்வமாய் வளர்ந்த ஒரு சிறு பெண் மனிதனைப்போல் வேஷம் போட்டுக்கொண்ட மாத்திரத்திலேயே நிர்மானுஷியமான காட்டில் மனிதனைப்போல் அலுப்படையாமல் திரிய முடியுமா? அக்குகையைக் கண்டமாத்திரத்தில் "இதற்குட்சென்றால் நமக்கு அங்கேயாராவது சாப்பாடு கொடுப்பார்கள்" என்று அதற்குள் புகுந்துபார்த்தாள்; அதில் யாருமில்லை. ஆனால் தேடிப்பார்க்கையில் சில்லென்று ஆறிப்போயிருந்த சாப்பாடு கொஞ்சம் அகப்பட்டது.

தனக்கு அகோரபசியாயிருந்ததினால் அவ்வுணவுக்கு உரியவர்கள் தன்னை அழைத்துக் கொடுக்குமட்டும் பொறுக்கக்கூடாமல் உட்கார்ந்து சாப்பிட்டாள். அப்போது "ஆ, மனிதராய்ப்பிறந்தால் அநேககஷ்டங்கள் படவேண்டியதாயிருக்கிறது. இதோ பார், நான் எவ்வளவு அலந்துபோனேன்; இரண்டு ராத்திரியாகத் தரைமீது படுத்துவருகிறேன்; எனக்குள்ள மனவுறுதியினால் இதுவரையில் தள்ளிக்கொண்டு வந்தேன்; இல்லாமற்போனால் ஏதாவது நோய் வந்தேயிருக்கும்; அம்மலை உச்சியிலிருந்து பிசானியன் 'அம்மா மில்போர்ட் ஹேவன் அதோ இருக்கிறது' என்று காட்

டினபொழுது அது எவ்வளவுசமீபமாய்க்காணப்பட்டது"என்றும், தன் கணவனைப்பற்றியும் அவனுடைய கொடுமையான கட்டளையைப்பற்றியும் பலவாறு சிந்தித்து, "ஆ! என் பிராணநாயகனுகிய போஸ்துமுவே, நீ சுத்த மோசக்காரன்" என்றும் தனக்குத் தானே பேசிக்கொண்டாள்.

தாங்கள் தகப்பனென்று நினைத்துக்கொண்டிருக்கும் பலாரியனோடு வேட்டைமேற் போயிருந்த இமோஜனுடைய சகோதரர்கள் இருவரும் இதற்குள் வீடுவந்துசேர்ந்தார்கள். பலாரியன் அவர்களுக்குப் பாலிடோர், காட்வால் என்று பேரிட்டிருந்தான். அவர்கள் வேறொன்றும் தெரியாதவர்களாய்ப் பலாரியனைத் தங்கள் தந்தையென்றே நினைத்திருந்தார்கள். ஆனால் அந்த ராஜகுமாரர்களுக்குக் கைடீரியன் என்பதும் ஆர்விராகு என்பதும் உண்மையான பெயர்.

குகைக்குள் பலாரியன் முதலில் புகுந்து இமோஜனைப் பார்த்து, அவ்விரண்டு சிறுவர்களையும் உட்புகாமல் நிறுத்தி, "சற்றுப்பொறுங்கள், உள்ளே வரவேண்டாம்; நம்முடைய ஆகாரத்தை ஏதோ சாப்பிட்டுக்கொண்டிருக்கிறது, அது ஓர் கந்தர்வ தேவதைபோலும்" என்றான்.

அதைச்சிறுவர்கள் கேட்டு, "ஐயா, என்ன சங்கதி" என்றார்கள். அதற்குப் பலாரியன் "இக்குகையில் கந்தர்வனோ அல்லது பூலோகத்தில் தனக்கு இணையில்லாத பெண்ணரசோ ஏதோ ஒன்று வந்திருக்கிறது" என்றான். சிறுவனைப்போல் வேஷம் போட்டுக்கொண்டிருந்த இமோஜன் பார்க்கப்பார்க்க மிகவும் அழகாயிருந்தாள்.

அவள் இவர்கள் குரலின் சந்தடியைக் கேட்டுக் குகையினின்று வெளியே வந்து அவர்களைப் பார்த்து, "பிரபுக்களே, என்னை ஒன்றும் செய்யாதேயுங்கள். இக்குகைக்குள் புகுவதற்கு முன் நான் சாப்பிட்டதைக் கெஞ்சிக் கேட்டாவது அல்லது விலைகொடுத்தாவது வாங்கிக்கொள்ள நினைத்தேன். உண்மையாய் நான் ஒன்றையும் திருடவில்லை. அன்றியும் தரையில் பொன்

இறைத்திருந்தாலும் அதை நான் தொடுவேனு? நான் சாப்பிட்ட ஆகாரத்துக்காக இதோ பணங்கொடுக்கிறேன்; நீங்கள் வராமற் போனுல் நான் சாப்பிட்டவுடனே இப்பணத்தைப் பலகையின் மீது வைத்துவிட்டு, இந்தச் சாப்பாட்டுக்குடையவரைப் பற்றிக் கடவுளை வேண்டிக்கொண்டே போயிருப்பேன்" என்ருள். அவள் கொடுக்கப்போன பணத்தை அவர்கள் எவ்வளவும் கூடாதென்று வாங்கச் சம்மதிக்கவில்லை. அதைக்கண்டு இமோஜன் பயப்பட்டு, "நீங்கள் என்னிடத்தில் கோபங்கொண்டாற்போலிருக்கிறது; ஆயி னும் பிரபுக்களே, நான் செய்த தப்புக்காக என்னை நீங்கள் கொல்லுகிறபட்சத்தில், அந்தத் தப்புச் செய்யாமற்போனுல் பசியினுல் நான் இறந்துபோயிருப்பேனென்று தெரிந்துகொள் ளுங்கள்" என்ருள்.

பலாரியன் "நீ எந்த ஊருக்குப்போகிருய்? உன் பெயர் என்ன" என்ருன். அதற்கு இமோஜன், "என் பெயர் பிடலி; என் பந்து ஒருவன் இத்தலி நாட்டுக்குப் போகவிருக்கிருன். அவன் மில்போர்ட் ஏவன் என்னும் இடத்தில் கப்பல் ஏறுவான். அவ னிடத்திற்குப் போக வந்துகொண்டிருக்கையில் பசியினுல் பிராணன் போகிறதாயிருந்தபடியால் இந்தக் குற்றம் செய்யும்படி நேரிட்டது" என்ருள். அதற்கு வயது சென்றவனுன பலாரியன், "அப்பா, அழகிய சிறுவனே, நான் உன்னை மிகவும் கேட்டுக்கொள் ளுகிறேன். எங்களைச் சுத்த லோபிகளாக நினைக்காதே; அன்றி யும் கரடுமுரடாய் இருக்கிற இச்சிறு குகையில் நாங்கள் வாசஞ் செய்வதினுல் எங்கள் மனதும் அப்படியே இருக்குமென்று நினை யாதே; அந்தமட்டும் நீ வெகு நல்லவர்களிடத்திற்கு வந்தாய்; இப்பொழுதோ இராத்திரி வரப்போகிறது; ஆகையால் இவ்விடத் தை விட்டுப்போவதற்கு முன்னமே இப்பொழுது சாப்பிட்டதைக் காட்டிலும் மேலான சாப்பாட்டை இவ்விடத்தில் தங்கியிருந்து சாப்பிடும்படி உன்னை நாங்கள் கேட்டுக்கொள்ளுகிருேம்" என்று சொல்லி, "பிள்ளைகளே, நீங்களும் இவனை இங்கேயிருக்கும்படி வருந்திக் கேட்டுக்கொள்ளுங்கள்" என்ருன்.

அவள் சகோதரர்களாகிய அவ்விரண்டு உத்தம வாலிபர்களும் இமோஜனை வெகு பிரியமான வார்த்தைகளோடு தங்களுடைய

குகைக்குள் வரவேண்டுமென்று அழைத்து, "எங்கள் சகோதரனைப் போல உன்னிடத்தில் நாங்கள் பிரீதி வைப்போம்" என்றார்கள். அப்புறம் அவர்கள் எல்லாரும் குகைக்குட் சென்று தாங்கள் வேட்டையாடிக்கொண்டுவந்த மானிறைச்சியைச் சமைக்கையில், இமோஜன் சமையல் வேலையில் தனக்குள்ள சாமர்த்தியத்தைக் காட்டி அவர்களைச் சந்தோஷப்படுத்தினாள். இக்காலத்தில் உயர்ந்த குலத்தில் பிறந்தபெண்கள் சமையல்வேலை கற்றுக்கொள்ளும் வழக்கம் இல்லாமற்போனபோதிலும் அக்காலத்தில் அது வழக்கமாயிருந்தது. அன்றியும் இமோஜன் இந்த உபயோகமான தொழிலில் நன்றாய்த்தேர்ந்தவள்; அவள்கைபாகத்தைப்பார்த்து அவள் சகோதரர்கள் "ஆ! இந்தப் பிடலி நாம் கொண்டுவந்த காட்டுக் கிழங்குகளை வெகு விசித்திரமாய் அரிந்தான்; அன்றியும் குழம்பைத் தகுந்தபடி வெகு பக்குவமாய்க் கூட்டிக் காய்ச்சினான்" என்று வெகு சிறப்பாய்ச் சொன்னார்கள். பாலிடோர் "இதெல்லாம் இருக்கட்டும், அவன் கந்தர்வனைப்போல் எவ்வளவு நன்றாய்ப் பாடுகிறான்" என்றான்.

அன்றியும் அவர்கள் ஒருவருக் கொருவர் "இந்தப் பிடலி குளிர்ந்த முகத்தோடு சிரித்துக்கொண்டே இருந்தபோதிலும், துக்கமும் பொறுமையும் அவன் மனத்திற் குடிகொண்டிருந்தாற் போல அவன் அழகிய முகத்தில் வெகு பரிதாபப்படும்படியான விசனம் தோன்றுகிறது" என்றும் சொல்லிக்கொண்டார்கள்.

இப்படி அவளிடத்தில் அவர்கள் கண்ட நற்குணங்களினாலோ, அல்லது அவர்கள் அறியாமற்போனபோதிலும் தங்களுக்கும் அவளுக்குமுள்ள ரத்தக்கலப்பினாலோ, தங்களால் பிடலி என்று அழைக்கப்படும் இமோஜனிடத்தில் பிராணனைப்போல் பிரீதிவைத்திருந்தார்கள். அவளும் அப்படியே அவர்களிடத்து அன்புவைத்து, தன் பிரியநாயகனாகிய போஸ்துமுஸினுடைய ஞாபகமாத்திரம் இல்லாமற்போனால், அதிதீரர்களாகிய அக்காட்டுச் சிறுவர்களோடு குகையிலிருந்து காலத்தைக் கழிக்கலாமென்று நினைத்தாள்; மில்போர்ட் ஏவனுக்குப்போகத் தேகத்தில் அலுப்பு நீங்கிப் போதுமான திராணி உண்டாகிற வரையில் அவர்களோடிருக்க வெகு சந்தோஷமாய் ஒத்துக் கொண்டாள்.

அவர்கள் கொண்டுவந்த மானிறைச்சி ஆய்விட்டவுடனே மறுபடியும் அதற்காக வேட்டைக்குப் போனார்கள். அப்பொழுது பிடலியென்று பேரிட்டுக்கொண்ட இமோஜனுக்கு உடம்பு அனுகூலமில்லாமையால் அவர்களோடு போகக் கூடாமையாயிருந்தது. தன் கணவன் செய்த கொடுமையினால் உண்டான விசனத்தினாலும், காட்டுவழியில் அலைந்த அலுப்பினாலும் அவளுக்கு நோயுண்டுபட்ட தென்பதற்குச் சந்தேகமில்லை.

அவர்கள் அவளிடத்தில் செலவுபெற்றுக்கொண்டு வேட்டைக்குப் போனார்கள். அப்படிப் போகையில் வழி முழுதும் பிடலி என்கிற சிறுவனுடைய உதாரகுணங்களையும், சிறந்த நடத்தையையும் பற்றிப் புகழ்ந்து பேசிக்கொண்டு போனார்கள்.

இமோஜன் இவ்வாறு தனிமையாய் நின்றவுடனே பிசானியுன் தனக்குக்கொடுத்த திராவகத்தின் நினைவுவர உடனே அதைக் குடித்துவிட்டு அயர்ந்து மெய்ம்மறந்து தூங்கினாள்.

பலாரியனும் இமோஜனுடைய சகோதரர்களும் வேட்டையாடித் திரும்பிவந்து, அவர்களில் பாலிடோர் முதலில் குகைக்குட் சென்று, பிடலி தூங்கிக்கொண்டிருக்கிறனென்று நினைத்துச் சந்தடி செய்யாமல் மெல்ல நடக்கத் தன் பெரிய பாதரட்சைகளைக் கழற்றிவிட்டான். வனத்தில் சஞ்சரிக்கும் வேடர்களைப்போல் இருந்த ராஜகுமாரர்களுடைய மனத்தில் இவ்வாறு உண்மையான அன்பும் அமைதியும் உண்டாயிருந்தன. அப்பால் என்ன சந்தடி செய்தாலும் அவன் விழித்துக்கொள்ளாமலிருப்பதைப் பாலிடோர் அறிந்து இறந்ததாக நினைத்துப், பிரியமான சகோதரர் விஷயத்தில் துக்கப்படுவதுபோல் தானும் பிடலியும் குழந்தைப் பருவமுதல் பிரியாதிருந்து இப்போது பிரிந்ததுபோல் விசனப்பட்டான்.

பலாரியன் "அவளைக் காட்டுக்கு எடுத்துக்கொண்டுபோய்க் கீர்த்தனைகளையும் உருக்கமான பாடல்களையும் அக்காலத்து விதிப்படி பாடிப் பிரேதகாரியங்களை நடத்தவேண்டும்" என்று சொன்னான். அப்படியே இமோஜனுடைய சகோதரர்கள் இருவரும்

மரங்கள் அடர்ந்த ஒரு தோப்புக்குட் கொண்டுபோய் அங்கிருந்த புல் தரையின்மீது அவளை மெதுவாய் வைத்துத் தேகத்தைவிட்டு நீங்கிப்போன அவள் ஆத்துமா அலையாமல் ஆறுதல் அடையும்பொருட்டுப்பல பாடல்களைப்பாடி, அவள் தேகத்தின்மீது இலைகளையும் புஷ்பங்களையும் பரப்பினார்கள். அப்பொழுது பாலிடோர் "பிடலி, நான் இங்கிருக்கும்வரையில் வசந்தகால முழுதும் பிரதிதினமும் உன் விசனகரமான சமாதியின்மீது புஷ்பங்களைக் கொண்டுவந்து தூவுவேன். உன் முகத்தைப்போல் விளங்காநின்ற பிரிம்ரோஸ் என்னும் வெண்பூவும், உன் நரம்புகளைப்போல் நிறங்கொண்ட அழகிய நீலமணியென்னும் புஷ்பமும், வாசனையில் உன் சுவாசத்திற்கு இடைந்துபோன சிறு ரோஜாப்பூவின் இதழ்களுமாகிய இவைகளையெல்லாம் உன்மேல் தூவுவேன். அன்றியும் எங்கும் பூக்கள் அகப்படாத மாரிகாலத்தில் பட்டைப்போல் மெதுவாகிய பாசியைக் கொண்டுவந்து உன் அழகிய சமாதியின்மேல் பரப்புவேன்" என்றான்.

பிரேதகாரியங்களை முடித்தவுடனே அவர்கள் வெகு விசனத்தோடு திரும்பிப் போனார்கள்.

அவ்விடத்தில் தனியே வைக்கப்பட்டிருந்த இமோஜன் சற்றுநேரம் பொறுத்துத் தூக்கத்தை உண்டு பண்ணும் மருந்தினாலுண்டான மயக்கம் தீர்ந்தவுடனே விழித்துக்கொண்டு, தன்மேல் மூடியிருந்த இலைகளையும் புஷ்பங்களையும் இலேசாக உதறிப்போட்டு எழுந்து, சொப்பனம் கண்டுகொண்டிருந்ததாக நினைத்து "நான் ஓர் குகையைக் காத்துக்கொண்டு அதிலிருந்த உத்தம ஜனங்களுக்குச் சமையல்செய்துபோட்டதாய் எண்ணியிருந்தேன்; அப்படிப்பட்டவள் புஷ்பங்களால் மூடப்பட்டு இவ்விடத்திற்கு எப்படிவந்தேன்" என்றாள்.

மறுபடியும் குகைக்குப் போக வழி தெரியாததனாலும், தன் புதிய சினேகிதர்களைப்பற்றி யாதொன்றும் அறியாததினாலும் தான் கண்டதெல்லாம் கனவென்றே நிச்சயித்தாள். தன் கணவனாகிய போஸ்துமுவினிடத்திலேயே மனது சென்றதினால் முன்போட்

டிருந்தவேஷத்தோடு மில்போர்ட் ஏவன் என்னும் பட்டணத்தைச் சேர்ந்து அங்கிருந்து இத்தலி தேசத்துக்குப் போகுங் கப்பலேறிச் செல்லலாமென்று நினைத்து மீண்டும் சிரமத்தோடு பிரயாணஞ் செய்யத் தொடங்கினாள்.

அப்பொழுது இமோஜனுக்குத் தெரியாத பெரிய சம்பவங்கள் நடந்துகொண்டிருந்தன. உரோமநாட்டுச் சக்கரவர்த்தியாகிய ஆகஸ்தஸ்ஸீஸர் என்பவனுக்கும், பிரித்தன் தீவுக்கு அரசனாகிய ஸிம்பலீனுக்கும் சில நாளைக்குமுன் திடீரென்று சண்டைமூண்டு பிரித்தன் தீவில் பிரவேசித்துச் சண்டை செய்யும்பொருட்டு உரோமசேனை இமோஜன் போய்க்கொண்டிருந்த ஆரணியமார்க்கம் வந்தது. அச்சேனையோடு போஸ்துமுவும் வந்தான்.

போஸ்துமு உரோம சைனியத்தோடு பிரித்தன் தீவுக்கு வந்தபோதிலும், அவர்கள் பட்சத்திலிருந்து தன் ஊராரோடு போர் புரியும் எண்ணமவனுக்கில்லை. ஆனால் பிரித்தன் நாட்டுச் சைனியத்தில் சேர்ந்து தன்னை ஊரைவிட்டுத் துரத்தின அரசன் பட்சத்திலேயே சண்டை செய்யவேண்டுமென்று வந்தான்.

இமோஜன் தனக்குத் துரோகம் செய்ததாகவே அவன் இன்னும் எண்ணியிருந்தான். ஆயினும் தான் மிக்க அன்புவைத்திருந்த இமோஜன் இறந்துபோனாளே, அதுவும் ஐயோ, தான் பிசானியனுக்கிட்ட கட்டளையை அவன் நிறைவேற்றின தாலாயிற்றே என்று ஆற்றொணுத் துயரங்கொண்டு, “நான் யுத்தத்தில் மடிந்தாலும் மடிகிறேன், அல்லது என்னை ஊரைவிட்டோட்டின அரசன் கொன்றாலுங் கொல்லட்டும், எப்படியு முயிர்விடுவதே நன்று” என்ற எண்ணத்தோடே பிரித்தன் தீவுக்கு வந்தான்.

இமோஜன் மில்போர்ட் ஏவனைச் சேர்வதற்குமுன் உரோம சைனியத்தாரின் கையில் அகப்பட்டுக் கொண்டாள். அவளுடைய சாயலும் ஒழுக்கமும் வியக்கத்தக்கனவாய் இருந்தபடியால் உரோம சேனதிபதியாகிய லூசியஸ் என்பவனுக்கு அவளை வேலைக்காரப்பையனுக ஏற்படுத்தினார்கள்.

பகைவரோடெதிர்த்துச் சண்டைசெய்ய ஸிம்பலீன் தன் சேனையோடு புறப்பட்டு அவ்வனத்தில் பிரவேசிக்கையில், பாலி டோர், காட்வால் என்னும் இருவரும் அந்த அரசன் சேனையைச் சேர்ந்தார்கள். இவர்களுக்கு அரசனுகிய தந்தை பட்சத்தில் தாங்கள் சண்டை செய்யப்போகிறதாகச் சற்றும் தெரியாமல் போன போதிலும், வீரச்செயலிற் பிரவேசிக்கவேண்டுமென்ற ஆவலுண்டாயிருந்தது. விருத்தனுன பலாரியனென்பவனும் அவர்களோடு யுத்தத்திற்குப் போனுன். ஸிம்பலீன் மகாராஜாவின் புத்திரர்களைத் தான் திருடிக்கொண்டுபோன கொடுமையைப்பற்றி நெடுங்காலம் பச்சாத்தாபப்பட்டுக்கொண்டிருந்தான்; அவன் இளமையிலேயே யுத்தத்தில் தேர்ந்த வீரனுகையால், தான் துரோகம் செய்திருந்த மகாராஜன் பட்சத்திலிருந்து சண்டைசெய்வது அவனுக்குச் சந்தோஷமாயிருந்தது.

உடனே அவ்விரண்டு சேனைகளுக்கும் அரும்போர் தொடங்கிற்று. அப்பொழுது போஸ்துமுவும்பலாரியனும் ஸிம்பலீனுடைய இரண்டு புத்திரர்களும் அற்புத பராக்கிரமத்தோடு சண்டைசெய்யாமல் போனுல், பிரித்தன் நாட்டார் தோற்று ஸிம்பலீனும் மாண்டுபோயிருப்பான். அந்நால்வரும் அரசனைப் பகைவர் கையினின்று விடுவித்து, அவன் உயிரைக் காப்பாற்றி எல்லாம் தங்கள் பட்சத்தில் அனுகூலமாகும்படி சண்டை செய்ததினுல் பிரித்தன் தீவினர் வெற்றி அடைந்தார்கள்.

போர்முகத்தில் இறந்துபோகவேண்டுமென்று துணிந்துவந்த போஸ்துமு அது முடிந்தும் தான் சாகாததைக் கண்டு, "அரசன் என்னை ஊரைவிட்டுத் துரத்தி மறுபடியும் வந்தால் கொல்லுவதாகச் சொன்னுனே, இப்பொழுதே கொல்லட்டும்" என்று ஸிம்பலீன் சேனைத்தலைவர்களில் ஒருவன்வசத்தில் தானே போய்ச் சேர்ந்தான்.

இமோஜனும் அவள் எஜமானனும் கைதிகளாய் ஸிம்பலீன் முன் கொண்டுவரப்பட்டார்கள். அப்படியே அவளுடைய பழைய பகையாளியாயும், உரோம சைனியத் தலைவர்களில் ஒருவனுயும்

இருந்த அயாகிமனும் கொண்டுவரப்பட்டான். அப்பொழுது மரண தண்டனை பெறும்பொருட்டுப் போஸ்துமுவையும் கொண்டுவந் தார்கள். இந்த ஆச்சரியமான சந்தர்ப்பத்திற்குச் சரியாய்த் தங்கள் பராக்கிரமத்தினால் மகாராஜனுக்கு அரிய உபகாரம் செய்ததற்கு வெகுமதி அடையப் பலாரியன், பாலிடோர், காட்வால் ஆகிய மூவரையும் இட்டுக்கொண்டு வந்தார்கள். மகாராஜனுடைய பரிவாரத்தில் ஒருவனாகிய பிசானியனும் அங்கிருந்தான். ஆகவே சிலர் சந்தோஷத்துடனும் சிலர் பயத்துடனும், போஸ்துமு வும், இமோஜனும், அவள் புதிய எஜமானாகிய உரோம சேனாபதி யும், நம்பிக்கையுள்ள சேவகனாகிய பிசானியனும், போஸ்துமு வுக்குச் சிநேகிதனென்று பேரிட்டுக்கொண்டிருந்து துரோகம் செய்த அயாகிமனும், காணாமற்போன ஸிம்பலீன் புத்திரர்கள் இருவரும், அவர்களைத் திருடிக்கொண்டுபோன பலாரியனும் ஆகிய இவர்கள் எல்லோரும் மகாராஜன் சமுகத்தில் நின்றார்கள்.

அப்பொழுது முதல் முதல் பேசினவன் உரோம சேனாபதி தான். மற்றவர்களில் அனேகருக்கு மனம் பதைபதைத்த போதிலும் வாய்திறவாமல் மகாராஜன் முன் நின்றார்கள்.

இமோஜன் போஸ்துமுவைக் கண்டவுடன் அவன் குடித் தனக்காரனைப்போல வேஷம் போட்டுக்கொண்டிருந்தும் இன்னா னென்று அறிந்துகொண்டாள். ஆனால் இமோஜன் புருஷ வேஷம் பூண்டிருந்ததனால் அவள் இன்னாளென்று அவ னுக்குத்தெரியவில்லை; அவள் அயாகிமனைத் தெரிந்துகொண்டது மன்றி, அவன் கையில் போட்டுக்கொண்டிருந்த வயிரமோதிரத் தைப் பார்த்து அது தனதென்றும் அறிந்துகொண்டாள். ஆனால் அவளுக்குநேரிட்ட கஷ்டங்களுக்கெல்லாம் அவனே காரண மென்பதை அதுவரையில் அறியாள். இப்பொழுது தன் தகப்ப னுக்குமுன் யுத்தத்தில் பிடிபட்ட கைதியாய் நின்றாள்.

பிசானியன் இமோஜனுக்கு ஆண்பிள்ளை வேஷம்போட் டவனாகையால் அவன் அவளைத்தெரிந்துகொண்டு, "அவள்தான் என் எஜமானி; அந்தமட்டும் க்ஷேமமாயிருக்கிறாளே! இனிமேல்

நல்லது வந்தாலும் கெட்டது வந்தாலும் வரட்டும்'' என்று தனக்குத்தானே நினைத்துக்கொண்டான். பலாரியன் என்பவனும் அவனைத்தெரிந்துகொண்டு, காட்வால் என்பவனோடு "செத்துக் கிடந்து மறுபடியும் உயிர்த்தவன் இவனல்லவா" என்று மெள்ளச் சொன்னான். அதற்குக் காட்வால்: "ஒரேவித மணலில் ஒன்றுக்கொன்று எப்படி வித்தியாசமிராதோ, அப்படியே ரோஜாப்புஷ்பத்தைப்போல் அழகிய மேனியுள்ள இச்சிறுவனுக்கும், இறந்துபோன பிடலிக்கும் யாதொரு வித்தியாசமும் இல்லை'' என்றான். அதற்குப் பாலிடோர் "அப்பொழுது இறந்துபோனவனே இப்பொழுது பிழைத்து வந்திருக்கிறான்'' என்றான். அதற்குப் பலாரியன் "பொறு பொறு, அவனாயிருந்தால் அவசியம் நம்மோடுபேசுவான்'' என்றான். மறுபடியும் அதற்குப் பாலிடோர், "ஆனால் அவன் இறந்துபோனதை நாம் பார்த்தோமே'' என்று மெள்ளச் சொன்னான். அதைக் கேட்டுப் பலாரியன் "சும்மாயிரு, பேசாதே" என்றான். போஸ்துமு தன்னைக் கொல்லும்படி மகாராஜன் எப்பொழுது உத்தரவுசெய்யப்போகிறானென்று எதிர்பார்த்துக் கொண்டே ஒன்றும் பேசாமல் இருந்தான். அன்றியும் தான் யுத்தத்தில் அரசன் உயிரைக் காப்பாற்றினதாய் அவனோடு சொன்னால் எங்கே தன்னிடத்தில் தயவுபிறந்து மன்னிக்கப் போகிறானோவென்று அதைச் சொல்லாமலே உறுதியாய் இருந்தான். இமோஜனை வேலைக்காரப்பையனாகத் தன்னிடத்திலேயே வைத்துக்கொண்டு காப்பாற்றிய லூசியஸ் என்னும் உரோமசேனாபதியே முன்சொன்னபடி அரசனோடு முதல் முதல் பேசினவன். அவன் மேலான தீரமும் வெகு கெம்பீரமுமுள்ள புருஷன். அவன் அரசனுக்குச்சொன்னதாவது: "தாங்கள் கைதிகளின்பொருட்டுப் பணம் வாங்கிக்கொண்டு அவர்களை விடுதலை செய்யாது எல்லோரையும் கொல்லப்போகிறதாகக் கேள்விப்பட்டேன். நானோ உரோமநாட்டான்; ஆகையால் உரோமர்களுக்குரிய தீரத்தோடு பிராணனைவிடுவேன். ஆனால் ஒரு விஷயத்தைப்பற்றி மாத்திரம் தங்களை வருந்திக் கேட்டுக்கொள்ளுகிறேன்'' என்று சொல்லி இமோஜனை அரசன்முன் கொண்டுவந்து நிறுத்தி, "இச்சிறுவன் பிரித்தன் ஜாதியில் பிறந்தவன்; இவனைப் பணம் வாங்கிக் கொண்டு விடுவிக்கவேண்டியது. இவன் என் வேலைக்காரன்; இவ

னைப்போல் அன்பும் அடக்கமும் எப்பொழுதும் உழைக்கும் தன்மையும் நம்பிக்கையும் தாயைப்போல் உபசரிக்கும் குணமும் உள்ள வேலைக்காரனை எப்பொழுதும் எந்த எஜமானனும் பெற்றிருக்கமாட்டான். இவன் உரோமஜாதியானுகிய எனக்கு ஊழியம் செய்துகொண்டிருந்தபோதிலும் பிரித்தன் ஜாதியார் ஒருவருக்குந் தீங்குசெய்ததில்லை. மற்றெவரையும் விடாமற்போனபோதிலும் இவனையாத்திரம் காப்பாற்றவேண்டியது" என்றான்.

ஸிம்பலீன் தன் மகளாகிய இமோஜனை நன்றாய் உற்றுப்பார்த்தான். மாறுவேஷத்தினால் அவள் இன்னுளென்று அறியவில்லை. ஆயினும் எல்லாவற்றிலும் மேற்பட்ட வலிமையுடைய இயற்கை அறிவானது அவனுக்குத் தெரியாமலே அவன் மனத்தில் பாசத்தை உண்டுபண்ணினதினுல் அவளைப்பார்த்துச் "சந்தேகமின்றி இச்சிறுவனை நான் முன்னே எங்கேயோ பார்த்திருக்கிறேன். இவன் முகம் எனக்குப்பழகினதாயிருக்கிறது. நான் என்ன காரணத்தைப்பற்றி இப்படிச்சொல்லுகிறேனே அது எனக்குத்தெரியாது. நீ க்ஷேமமாயிருக்கவேண்டியது; உன் பிராணனை உனக்குக் கொடுத்தேன். உனக்கு என்ன வரம் வேண்டுமோ கேள், அதைக்கொடுக்கிறேன். இங்கிருக்கப்பட்ட கைதிகளில் முதன்மையானவனுடைய பிராணனை ரட்சிக்கும்படி கேட்டாலும் சரிதான்" என்றான். அதற்கு இமோஜன்: "சுவாமீ, வெகு வணக்கத்துடன் தங்களுக்கு வந்தனஞ்செய்கிறேன்" என்றாள்.

அக்காலத்தில் வரங்கொடுப்பதென்றால், அதைக்கேட்கும்படி உத்தரவுபெற்ற மனிதன் தன் இஷ்டத்தின்படி எதுவாயிருந்தாலும்சரி ஒன்றைக்கேட்டால் அதைக்கொடுப்பதாகவாக்குத்தத்தம் செய்வதேயாம். வேலைக்காரப்பையன் எதைக் கேட்பானே வென்று எல்லோரும் ஜாக்கிரதையாய்ப் பார்த்துக்கொண்டிருந்தார்கள். அப்பொழுது அவள் எஜமானனுகிய உரோமசேனுதிபதி அவளைப்பார்த்து: "அப்பா சிறுவனே, என்பிராணனைக்கேட்பதில் எனக்கு இஷ்டமில்லை; ஆனல் நீ அதைத்தான் கேட்கப்போகிறுய் என்று எனக்குத் தெரியும்" என்றான். அதற்கு இமோஜன், "ஐயோ! அதல்ல, அதல்ல! சுவாமி, இப்பொழுது நான் வேறொன்

றை அவசியம் கேட்கவேண்டியதாயிருக்கிறது ; தங்கள் பிரா ணனைக் கேட்கமுடியாது'' என்றாள். அச்சிறுவன் இப்படி நன்றி யற்றவனைப்போல் பேசியதை அந்தச் சேனாதிபதி கேட்டு ஆச்சரிய முற்றான்.

அப்புறம் இமோஜன் அயாகியனை உற்றுப்பார்த்து : "அவன் கையில் போட்டுக்கொண்டிருக்கும் மோதிரத்தை எப்படிச் சம்பாதித்தானோ அதைமாத்திரம் உண்மையாய்ச் சொல்லிவிடும் படி செய்தால் எனக்கு அந்த ஒருவரமேபோதும்'' என்றாள். ஸிம்பலீன் அப்படியே அவ்வரத்தைக்கொடுத்து, அயாகியனைப் பார்த்து, "உன்விரலில் அணிந்திருக்கும் வைரமோதிரம் உனக்கு எப்படிக்கிடைத்ததோ அதை மறைக்காமல் சொல் ; இல்லாமற் போனால் உன்னைச் சித்திரவதை செய்விப்பேன்'' என்றான்.

இதைக்கேட்டு அயாகியன், தான் செய்த மோசத்தை எல்லாம் ஒத்துக்கொண்டு, முன்சொன்னபடியே போஸ்துமு வோடு பந்தயம்போட்ட சங்கதியையும், அவன் தான் சொன்ன தையெல்லாம் சற்றும் சந்தேகிக்காமல் நம்பும்படி தான் செய்த தந் திரத்தையும் விவரமாய்ச் சொன்னான். இப்படித்தன்மனைவி ஒரு பாவமும் அறியாத உத்தமியென்று ருஜுவானதைப் போஸ்துமு கேட்டவுடனே, அவன்மனது இத்தன்மையாயிருந்ததென்று நம் மாற்சொல்லிமுடியுமோ? அவன் உடனே அரசனுக்குமுன் வந்து, அந்த ராஜகுமாரத்தியைக் கொல்லும்படி பிசானியனுக்குத் தான் உத்தரவுசெய்ததை ஒத்துக்கொண்டு : "ஆ! இமோஜன்! என் னுயிரே! என் துணையே! ஆ! இமோஜன்! ஆ! இமோஜன்!" என்று மனந்தடுமாறி உரக்கக் கூவினான்.

இப்படித் தன் அன்புள்ள கணவன் துயரப்பட்டுக்கொண்டி ருப்பதை இமோஜன் பார்த்து, தான் இன்னாளென்று சொல்லாம லிருக்கக்கூடாமையால் போஸ்துமு சொல்லிமுடியாத ஆனந்தம் அடையும்படி தன்னை வெளியிட்டாள். இதனால் தான் மகா பாதகம் செய்ததாய்த் துக்கப்பட்டுக்கொண்டிருந்த போஸ்துமு தேறுதல் அடைந்து, தான் வெகு கொடுமை புரிந்த தன் பிரிய மான மனைவிக்கு முன்போலவே அன்புள்ள கணவனாயினான்.

ஸிம்பலீன் காணமற்போன மகளை மறுபடியும் இவ்வாறு அதிசயமாய்க்கண்டதைப்பற்றிப்போஸ்துமுவைப்போலவே ஆனந்தத்தில் மூழ்கி, முன்போலவே தன்மகளிடத்தில் பிரீதிவைத்து, அவள் கணவனாகிய போஸ்துமுவையும் காப்பாற்றினதோடுகூட அவனைத் தன் மருமகனாகவும் அங்கீகரித்தான்.

இப்படி இவர்கள் ஒருமைப்பட்டுச் சந்தோஷமாயிருக்கையில், பலாரியன் என்பவன் தான் அரசனுடைய குழந்தைகளைத் திருடிக்கொண்டுபோன சங்கதியை வெளியிடத்தகுந்த சமயம் வாய்த்ததென்று நினைத்து, பாலிடோர், காட்வால் இவர்களை அரசன்முன் கொண்டுபோய்விட்டு, "சுவாமி, இவ்விருவரும் காணமற்போன கைடீரியன், ஆர்விராகு என்னும் உம்முடைய புத்திரர்கள்" என்றான்.

ஸிம்பலீன் வயதுசென்ற பலாரியனை மன்னித்தான். எல்லோரும் சந்தோஷப்பட்டுக்கொண்டிருக்கும் காலத்தில் தண்டனை என்பது மனத்தில் தோன்றுமா? தன் மகள் பிழைத்திருப்பதும், தன் பட்சத்தில் வெகு பராக்கிரமத்தோடு யுத்தஞ்செய்து தன்னை மீட்டுக்கொண்டுவந்த சிறுவர்கள் காணமற்போன தன் புத்திரர்களென்று தெரிந்துகொண்டதும், அவனுக்கு அளவற்ற சந்தோஷமுண்டாக்கின.

தனக்கு முன் எஜமானனாயிருந்த உரோமசேனாபதி லூசியஸ் என்பவனுக்குத் தன் இஷ்டப்படி உபகாரம் செய்ய இமோஜனுக்கு அப்போது அவகாசமுண்டாயிருந்ததினால், அவள் தன் தகப்பனைக் கேட்டுக்கொண்டதின்பேரில் அவன் அப்படியே தடையின்றி அச்சேனாபதியைக் கொல்லாமல் காப்பாற்றினான். அன்றியும் அந்த லூசியஸ் என்பவனுடைய மத்தியஸ்தத்தினாலேயே ரோமர்களுக்கும் பிரித்தன் நாட்டாருக்கும் சமாதானமுண்டாய் அவ்விருதிறத்தாரும் வெகுகாலம் பகையின்றி வாழ்ந்து வந்தார்கள்.

ஸிம்பலீனுடைய கொடிய மனைவியாகிய மகாராணி தன் எண்ணம் ஈடேறாமற்போனதைப்பற்றி உண்டான துக்கத்தினா

லும், தான் கொடும்பாவியென்று புத்தியில் நன்றாய்ப்பட்டு மனப் புண்ணுனதினாலும் நோயால் மெலிந்து இறந்தாள். அப்படி இறப்பதற்குமுன் தன் மூடமகனாகிய க்ளோடன் தானே ஒரு வனுக்குக் கோபமுண்டாக்கி வருவித்துக்கொண்ட ஒரு சச்சரவில் மடிந்ததைப் பார்த்தாள். இந்தச் சங்கதிகளெல்லாம் விசனகர மானவைகளாகையால், அவற்றைச் சுருக்கமாய்க் குறிப்பிடுவதை விட்டு விரித்துச்சொன்னால் இக்கதையின் முடிவில் உண்டான சந்தோஷத்தைக் கெடுத்துவிடும். நல்லவர்கள் எல்லாரும் சந்தோஷம் அடைந்தார்கள், அதுவே போதும். அன்றியும் துரோகியாகிய அயாகிமன் புரிந்த மோசம் முடிவில் ஈடேறாமற்போனதினால் அவனும் தண்டனையின்றி விடுவிக்கப்பட்டான்.

# ELIZABETH FRY.

# எலிஜபெத் ப்ரை.

1780—1845.

மானிட ஜன்மமடைந்தவர்கள் பெறவேண்டிய பல நற்குணங்களுள் முதன்மையானது லோகோபகாரமே. லோகோபகார சிந்தையுடையவர்களாய் நன்மை செய்யப் பாடுபட்டவர்களின் சரித்திரத்தை யறிதல் நாகரிகமடைதற்கு வேண்டிய காரணங்களுள் ஒன்றாயிருப்பினும் அப்படிப்பட்ட சரித்திரங்கள் இதுவரையில் நமது தேசபாஷைகளில் அதிகமாக ஏற்படாமலிருப்பது பெருங்குறைவாக இருக்கின்றது. முற்காலத்தில் பக்திமார்க்கமாய் லோகோபகாரமான காரியங்களைச் செய்து கீர்த்திபெற்ற நமது தேசத்து ஸ்திரீகளின் சரித்திரம் சிலவுண்டென்பது வாஸ்தவமே. ஆயினும் இக்காலத்தில் நாடு சீர்திருத்தம் பெறுதற் பொருட்டுச் சிறிதும் சுயநயம் பாராட்டாமல் லோகோபகாரத்திற்காகவே முயற்சி செய்து தங்கள் வாழ்நாளைக் கழித்த பிறதேசத்து உத்தமிகளின் வரலாற்றை நமது தேசத்தார் தெரிந்துகொள்வது நலமாயிருக்குமென்று கருதி, அத்தன்மையான சில மாதர்களின் சரித்திரத்தைக் கல்வி கேள்விகளிற் சிறந்த அங்கிலேய துரைசானிமார்கள் எழுதியனுப்பியதை அநுசரித்து, தமிழ் நாட்டாருக்கு உபயோகமாகும்படி எளிதான தமிழ் நடையில் எழுதத் துணிகின்றோம்.

லோகோபகாரமாகப் பாடுபட்ட பிறதேசத்துப் பெருமாட்டிகள் பலருள், சிறைச்சாலையில் அகப்பட்ட பெண் குற்றவாளிகளுக்குச் சன்மார்க்க போதனைசெய்த எலிஜபெத் ப்ரை என்னும் துரைமகளே சிறந்தவரெனத் தோற்றுகிறாராதலால் அவர் சரித்திரத்தை முதலில் எழுதுகிறோம்.

இந்த எலிஜபெத் கர்னி என்னும் பெருமாட்டியார் 1780-ம்ஹு பிறந்தார். அவருடைய தாய் தந்தையர்கள் உயர் குலத்திற் பிறந்தவர்கள்; மிக்க செல்வமுடையவர்கள்; அவர் இங்கிலாந்து தேசத்தின் கிழக்குத்திசையிலுள்ள நார்விச் நகரத்துக்கு அருகேயுள்ள ஓர் அழகான சோலையின் நடுவிலிருந்த பெரிய வீட்டில், சகோதரரும் சகோதரிகளுமாகிய பதினொரு பேருடன் கூடி வாழ்ந்தார்.

அவருடைய தாயும் தந்தையும், பிறருக்குப் பயன்படுதற் பொருட்டு இவ்வுலக இன்பத்தில் அதிகமாக ஈடுபடாமல் மிதமான உண்டியை உண்கிறவர்களும், ஆடம்பரமின்றி வாழுகின்றவர்களுமாயிருந்தார்கள். உடைநடை பாவனையைப் பார்க்கையிலே தானே அவர்களை இன்னாரென்று யாரும் எளிதில் அறிந்துகொள்ளலாம். ஆனால் அவர்கள் தங்களுக்கிருந்த செல்வத்துக்குத் தக்கபடி நன்றாய் உண்டுடுத்துச் சுகமாக வாழ்ந்தார்கள்.

அவர்களுக்கு வெளியே சுகமாய்ப் போகவரக் குதிரைவண்டியொன்றுண்டு; எல்லோரையும்போலவே சாதாரணமாய்ப் பேசுவார்கள்; சாதாரணமாய் எல்லோரும் அவர்களுடைய வீட்டுக்கு வார்த்தைசொல்லப் போவதும் வருவதுமாயிருப்பார்கள்; அவர்கள் தங்கள் மக்களைச் சுகமாகப் போற்றி வளர்த்துவந்தார்கள்; அவர்களை நன்னெறிமுறை பிறழாது நடக்கும்படி செய்து தெய்வ பக்தியுடையவர்களாகச் செய்தார்கள். இவ்வுலகமெங்கும் பெரும் புகழ்பெற்ற உத்தமியாகிய எலிஜபெத் ப்ரையின் தாயார் ஆதி முதல் தம்மகளைப் போற்றிவந்த கிரமத்தை யாரும் நன்றாய் அறிந்துகொள்ளும்படி அவர் எழுதிவைத்திருக்குந் தினசரியினின்று சிறிது இங்கு எடுத்துக் காட்டுகிறோம். அதாவது:—

"எவ்வகையான இடுக்கண் வந்துற்றவிடத்தும், இறைவன் விட்டவழி விடட்டுமென்று அவன் சரணகமலத்தைப் போற்ற வேண்டும்; உயிர்க்கிறுதி வருகிறதாகவிருந்தாலும் கடவுளை மறக்கவொண்ணாது. இவ்வுலகில் மதவிஷயமாகப் பலர் ஒருவருக்கொருவர் வேறுபட்டு வாதாடிச் சண்டைசெய்வது விழலுக்கிறைத்த நீரைப்போல வீணேயாகும்; அவ்வாறான நூல்களை நாம்

தழுவியிருக்கும் மதத்தில் புகழ்ந்திருந்தாலும், அவற்றைப் படிப் பதினால் அத்தனையாகப் பயனுண்டாகிறதில்லை. நெஞ்சையொளித்தொரு வஞ்சகமில்லை யாதலால், மனத்தின்கண் மாசில்லாதிருத்தலே அறம். என்னுடைய பெண்களெல்லாரும் இவையனைத்தையும் உண்மையென்று நம்பி அவற்றின்படி நடக்கவேண்டுமென்று என் மனத்தில் ஆசை குடிகொண்டிருக்கிறது. நன்னெறிமுறையினின்றுந் திரியாதிருப்பதற்குத் தெய்வபக்தியே மூலகாரணமாதலால், பெண்களுக்கு அது அவசியம் வேண்டும்; இது வேதநூலின் கொள்கையேயன்றிப் புதிதாகச் சொல்லப்பட்டதன்று.''

''நாம் கல்வி கற்று அறிவை விருத்திசெய்வது முக்கியமாகையால், பாஷை, கணிதம், சரித்திரம், பூகோளம், ஜந்துசாஸ்திரம், சித்திரமெழுதல் முதலியவைகளும் பெண்களுக்குந் தெரிந்திருப்பது நன்று. 'பாழே கொடியில்லா மனை' என்றபடி மனையாளில்லாத வீடு பாழாதலாலும், வீட்டில் செய்யவேண்டிய வேலைகளெல்லாம் மனையாளைப் பொறுத்தனவாதலாலும், பண்டங்களை அவற்றின் நிலையறிந்து சீராக வைத்திருத்தல், குடித்தனப் பாங்காய்ச் செலவு செய்தல், கணவனை வழிபடல், பிள்ளைகளைப்போற்றல் முதலிய எல்லா விஷயங்களிலும் நன்றாய்ப் பயின்றிருக்கவேண்டும். இவை எல்லாவற்றுள்ளும், 'அடக்கமுடையார் அறிஞர், அடங்காதார் கல்லார்' என்று கூறியபடி அடக்கமே பெரிதாதலால், அடங்கியிருக்கவேண்டும்'' என்கிறார்.

"அடக்கமமரருளுய்க்குமடங்காமை
ஆரிருளுய்த்துவிடும்"

எலிஜபெத் ப்ரை அவருக்கு மூன்றாவது பெண்; அப் பெண் தலைமயிர் அழகாயிருக்கும்; குழந்தைப் பருவந்தொடங்கியே பெண்ணுக்கினிய மடம், நாணம், அச்சம், பயிர்ப்பு என்னுங் குணங்கள் அவரிடத்தில் குடிகொண்டிருந்தன. எங்கேயாவது சத்தங்கேட்டால் அவர் நடுங்குவார்; யாரேனும் சற்றேறுப்பார்த்தால் கண்ணீர் விடுவார். அவருக்குத் தாயாரிடத்திற் பற்று அதிகம்; இவ்வாறே அவர் தமது தாய்க்குச் செல்வ

முகளானார். அச்சமுள்ள குழந்தைகளுக்குள்ள சுபாவப்படியே அவருக்கு இருட்டைக் கண்டால் மயிர் சிலிர்த்து உடல் நடுங்கும்.

அவர் வாயைத் திறந்து ஒருவருடனும் பேசுகிறதில்லை. ஆதலினால் அவரை எல்லோரும், பேசாமடந்தையென்றும், அறிவில்லாதவளென்றும், பிடிவாதக்காரியென்றுஞ் சொல்வதுண்டு. சில சமயங்களில் இவ்வாறு அவரை எல்லோரும் பழிப்பது அவர் காதிற் பட்டதுமுண்டு. இப்படி அவர்கள் எந்நேரமுஞ் சொல்லுவதைக் கேட்பதனால் அவர் மனஞ்சோர்ந்து தமக்குப் படிக்கும்படியான பாக்கியமில்லாமற் போயிற்றேயென்று விசாரப்படுவார். அவர் படியாதிருந்ததற்கு இதுவும் காரணமாயிற்று. ஆதலினால் அவர் பாலியத்திலே படியாமல் மனம்போன போக்கின்படி செய்யவும், பிடிவாதமாய் நடக்கவும் நேர்ந்தன. அவர் பெரியவரானபின்பு, தாம் பாலியத்திலிருந்த நிலைமையைப்பற்றி அடியிற்கண்டவாறு எழுதியிருக்கிறார்.—"எனக்குச் சற்றே பிடிவாதமுண்டு; அதுமாத்திரமல்ல; யாவரேனும் ஏதாவது ஒன்றைச் சொன்னால் அதை அல்லவென்று மறுத்து வீண்வழக்காடுவதுமுண்டு" என்கிறார்.

இந்தக் குணங்கள் நாளுக்குநாள் அதிகப்பட, பிற்காலத்தில் அவற்றால் அவருக்குப் பெருமையுண்டாயிற்று. அவர் எதையும் தாமே யோசித்துச் செய்தும், தாம் செய்யப்புகுந்த காரியத்தை மனஞ்சோராது செய்து முடித்தும், யார் தடுப்பினும் அஞ்சாத்தீர குணத்தைக்காட்டியும் வந்தார். இந்தக் குணங்கள் இளமைப் பருவத்திலேயே வித்திடப்பட்டதுபோலாயின. அவற்றோடு அவர் தாய் இளமைதொடங்கியே தம்மக்களுக்கு வேதவாக்கியங்களின் உள்ளுறையான கருத்துகளெல்லாம் நன்றாய் விளங்கும்படி நாடோறும் சொல்லிக்கொண்டுவந்திருந்ததினால், அவர் வீட்டாரெல்லோருக்கும் எப்பொழுதும் ஆழ்ந்த தெய்வபக்தி யுண்டாயிருந்தது. அவருக்குப் பன்னிரண்டாவது வயதில் அவர் தாய் தேகவியோகமானார். அதனால் பின்பு அவருக்குப் புத்திசொல்லுவாரில்லை.

அவர் பதினேழாம்வயதில் நன்றாய் உயர்ந்து வளர்ந்து அழகாயிருந்தார். அவரிலும் அவர் தமக்கைமார்களிருவரும்

மிக்க அழகுடையவர்களென்றாலும், பார்த்தவர்களெல்லாருங் கண்டு அவரையே கட்டழகியென்று வியந்தார்கள். அவர் யாரோடு வார்த்தை சொன்னாலும் கேட்கக் கேட்க இன்பமாயிருக்கும்படி சொல்லுவார்; முகம் செந்தாமரை மலர்போல மலர்ந்து, கண்கள் அழகு வாய்ந்து, குரல் குயில் கூவுவதுபோன்றிருக்கும். அவர் எழுதிவைத்திருக்கின்ற தினசரியினின்று நாம் அடியில் பெயர்த்து எழுதியிருப்பதைப் படிப்பதனால், அந்தக் காலத்தில் அவர் மனமும் கருத்தும் இன்னவாறிருந்தன வென்பதை அறிந்துகொள்ளலாம்; அதாவது:—"இன்று எனக்குப் பதினேழாம் பிராயம் நிறைந்தது. நான் சென்றவருஷம் இந்நாளிருந்ததைவிட இப்பொழுது அதிக சுகமாயிருக்கிறேன். நான் என்னிடத்திலும், மற்றவர்களிடத்திலும் எத்தனையோ விஷயங்களைக் கண்டிருக்கிறேன். நான் என் மனம்போன போக்கின்படியெல்லாம் நடந்துவிட்டேன். நெஞ்சை யொளித்தொரு வஞ்சகமில்லை ஆதலால், நான் குற்றமுடையேனென்பது என் மனதாரத் தெரிந்ததேயாம்; ஆயினும் அக்குற்றங்களைக் கடிந்து இன்னும் குணப்படவில்லை. இனிமேல் கணப்பொழுதேனுந் தாமதியாமல் உறுதியாய்நின்று என்னிடத்திலுள்ள தீக்குணங்களனைத்தையும் போக்க வழிபார்க்கவேண்டும். இனி எந்தக்காரியத்திலும் அவசரப்படலாகாது; காரணமின்றி எதையும் மறுப்பதுதகாது; எனக்கு என்றுமுள்ள வழக்கப்படி வீண் வழக்காடுவதை விட்டுவிடவேண்டும். மிதந்தப்பிச் சுகத்துக்கு ஆசைப்படலாகாது; மனஞ்சோர்ந்திருப்பது கூடாது. "தீமை விலக்கு" என்றபடி தீயவற்றைச் செய்வதினின்றும் விலகி "நன்மை கடைப்பிடி" என்றபடி நன்மையானவற்றைக் கைப்பற்றவேண்டும். ஏதேனும் ஓர் நல்ல மதத்தைத் தழுவி அதன்படி நடப்பதே நலமென்று தோற்றுகிறது; ஏனெனில், அப்படிச்செய்தால் பல நன்மைகளைச் செய்தற்கு அநுகூலமாயிருக்கும். எனக்குள்ள நற்குணங்களை நான் நாளடைவில் இழந்துவிடுவேனென நினைக்கிறேன். எனக்கு நாளுக்குநாள் வெடுவெடுப்பும், டம்பமும், இறுமாப்பும், வீண்செலவு செய்தலும் அதிகமாகிவருகின்றன. இத்தனையும் எனக்கிருந்த உல்லாச விநோதத்தினாலும், உலக இன்பத்திலுள்ள ஆசையினாலுமே என்னைப் பற்றின;

நான் உண்மையான மதமொன்றை நம்பியிருப்பேனேயாயின், இப்பொழுதிருப்பதிலும் இன்னும் எவ்வளவோ மேன்மையைப் பெற்றிருப்பேனென்பது எனது துணிவு.''

மேலும் '' இவ்வுலகவாழ்க்கையில் பற்றுவைப்பதினால் இப்பொழுது எனக்கு வருத்தமுண்டாகிறது ; உலகவாழ்க்கையினால் இறுதியில் துன்பமே மேலிடுகின்றது ; உலகவாழ்க்கை மனதைக் கெடுத்து, டம்பம், இறுமாப்பு, வீணெண்ணம், பொறாமை, பேராசை இவற்றை வளர்க்கின்றது ; உடை நடை முதலியவை களிலே புத்தி நாடுகின்றது ; பின்பு இவற்றினாலெல்லாம் மனதுக்குச் சுகமுண்டாகாததைக் கண்டு, கட்டுக்கதை படிப்பதிலும், தூஷிப்பதிலும் புத்தி செல்லுகின்றது'' என்று தாமே எழுதியிருக்கிறார். இன்னோரிடத்தில், '' அவதூறு பேசுவது தீதென்று நான் நன்றாக அறிந்திருப்பினும், எனக்கு அப்படிப் பேசுவதே அதிக ஆசை'' என்று தாமே ஒப்புக்கொண்டிருக்கிறார். இவ்வுலக இன்பத்துக்கும், இவ்வுலக இன்பத்தைத் துறந்து ஆண்டவன் திருவடிகளைப் பற்றுவதற்குமுள்ள பேதம் எலிஜபெத் ப்ரைக்குத் தெரியாமலிருந்தது ; பின்பு அவர் நாளடைவில், தாம் அடிநாளில் செய்ததையெல்லாம் நினைத்து அநுதாபப்பட்டு, ஏழைகள், பாவிகள், துன்புற்றோர் முதலிய கதியற்றவர்களைக் கண்டு இரக்கமுற்று, அவர்களோடு பழகப்பழக முன்னிருந்த தீக்குணங்கள் ஒருவாறு நீங்கின.

அமெரிக்கா கண்டத்தினின்றும் ஊரூராய்ச் சென்று பிரசங்கிக்க வந்திருந்த குவேக்கர் வகுப்பினரைச் சேர்ந்த வில்லியம் ஸேவரி என்னுங் குருவின் பிரசங்கங்களைக் கேட்டதே அவர் நல்வழிப்படுவதற்கேற்ற காரணமாயிற்று. அந்தக் குரு செய்த பிரசங்கங்களைக் கேட்குந்தோறும் கண்ணுங் கண்ணீருமாய் அவர் மனங் கரைந்துருகி, தம்மால் கூடியவரையில் வேதத்தில் சொல்லப்பட்டிருக்கிறபடி வழுவாது நடக்கவேண்டுமென்று நிச்சயித்துக்கொண்டார். தந்தை அவர் கருத்துக்கொண்ட விதத்தை யறிந்து, அவர் வீணான உலக இன்பத்தை ஒழித்து அதிக பக்தி வைராக்கியமுடைய வைதிகராகிய குவேக்கர் வகுப்பினரைச் சேருவதற்கு முன்பே அவர் மனம் நன்றாய்த் திருந்த

வேண்டுமென்கிற முழு நோக்கத்துடனே, அவரை லண்டன்மா நகரத்திற் கழைத்துக்கொண்டுபோய், அங்கே பலரோடு கலந்து கொண்டாடிக் குலாவும்படி செய்து அங்குள்ள நாடகசாலை களில் நடந்த ஆடம்பரங்களையெல்லாம் பலமுறை நன்றாய்க் காட்டினர். ஆயினும் அவருக்கு நாடகத்தில் ஆசையில்லை. அவர் இயல்பாகவே நல்ல உறுதியும், விவேகமும், மனச்சுத்தியு முடை யவராதலால், அவையொன்றிலும் அவருக்கு ஆசை பற்றவில்லை இவ்வண்ணம் அவர் யாத்திரை செய்தது அவருக்கு மிகுந்த நன் மையை உண்டாக்கிற்று.

இது நடந்த முப்பது வருஷத்துக்குப்பின் "கற்றவை பல; நினைத்தவை பல; நான் உல்லாசமாயிருந்தவர்கள் எத்தனையோ பேரைப் பார்த்திருப்பதுமன்றி, நானே அனுபவித்துமிருக் கிறேன்; எத்தனை இடங்களில் ஆடல் பாடல் முதலியவற்றையுங் கண்டிருக்கிறேன்; பலர் கூடி உண்ணும் விருந்து மண்டபங்க ளுக்கும் போயிருக்கிறேன்; இவ்வுலகில் நான் பாராத விநோத மில்லை" என்று எழுதியிருக்கிறார்.

அவருக்கு இவ்வுலகத்தின் தன்மையெல்லாம் நன்றாய்த் தெரியும். பெருந்தன்மையும், ஆழ்ந்த விவேகமு முடையவ ராதலால்,

"நீரிற் குமிழியிளமை நிறைசெல்வம்
நீரிற் சுருட்டுநெடுந் திரைகள்—நீரி
லெழுத்தாகும்யாக்கைநமரங்காளென்னே
வழுத்தாததெம்பிரான்மன்று"

என்றபடி இவ்வுலக இன்பத்தினால் மனதுக்கு நிலையான சுகமில்லை யென்றும், எல்லாம் அற்பமென்றும், நிலையான சுகம் பெறுவதற் கேற்ற வழியைத் தேடவேண்டுமென்றுங் கண்டார். வில்லியம் ஸேவரி என்பவரின் மதுரவாக்கைப் பல முறையுங் கேட்டு ஆநந்த பரவசரானார். அதன் பயன் அவர் வீட்டிற்கு வந்தபொழுது தெரிந்தது. ஆரம்பத்தில் அவர் தாம் வழக்கமாய்ச் சிவப்புச் சாயந் தோய்த்த உடையை உடுப்பதை மாற்றிவிட்டுத் தம்மேலணிந் திருந்த ஆபரணங்களையெல்லாங் கழற்றி ஒரு பக்கத்திலே வைத்து

விட்டுத் தமக்கு ஒழிந்த காலத்தில் எளிய குழந்தைகளுக்குப் பாடஞ்சொல்லத் தலைப்பட்டார். அவர் பள்ளிக்கூடமொன்றை ஸ்தாபிக்கவும், அதில் எழுபது ஏழைக்குழந்தைகள் படிக்க வந்தார்கள்; அத்தனை பேருக்கும் அவர் வேறொருவர் துணையுமின்றிப் புத்தகங்களுமில்லாமல் தாமே பாடஞ்சொன்னார். நூறு வருஷங்களுக்கு முன்னே புத்தகங்கள் இக்காலத்திலே கிடைப்பதுபோலச் சுலபமாகக் கிடைப்பதில்லை; அப்படிக் கிடைத்தாலும் அதிக விலைகொடுத்து வாங்கவேண்டும்.

1800-ம் ௵ எலிஜபெத் என்பவருக்கு இருபதாம் பிராயம் நிறைய, மிக்க தனமுடைய வர்த்தகசாலையில் கூட்டு வியாபாரஞ் செய்துகொண்டிருந்த ஜோஸப் ப்ரை என்பவருக்கு அவர் வாழ்க்கைப்பட்டார். அதனாலேதான் அவருக்கு எலிஜபெத் ப்ரை என்று நாமதேயமாயிற்று. அவர் அதுமுதல் தமது கணவனுடன் லண்டன் நகரத்தில் வெகுகாலமிருந்தார். அவருடைய குழந்தைகளெல்லாம் பெரும்பான்மையாய் அந்நகரத்திலே பிறந்தவர்கள். அவர் அங்கிருந்தகாலத்தில் தமக்குள்ள வழக்கப்படி எளிய நோயாளிகளின் வீடுகளுக்குப் போய்ப் பார்த்துவருவார். திக்கற்றவர் எங்கே அகப்படுவார்களென்று மூலைக்குமூலை சந்து சந்தாய்த் திரிந்து, சகிக்கக்கூடாத நாற்றமுள்ள விடங்களுக்குஞ் சென்று பார்ப்பார். கல்வியிலே அவருக்கு அதிக விருப்பமாதலால், குவேக்கர்களிருக்கும் தொழிற்சாலைப் பாடசாலைகளுக்குச் சென்று பார்த்துவருவார். இவ்வாறு அவர் ஒன்பது வருஷ காலமளவும் லண்டனில் வசித்தார். பின்பு அவர் மாமனார் இறந்துபோனதால் அந்த வீட்டார் யாவரும் அந்நகரத்தை விட்டு நாட்டுப்புறத்துக்குப் போய்விட்டார்கள்

அவருக்குச் செடி கொடிகளைக் காண ஆசையாதலால், அவர்கள் அப்படிச் செய்தது அவருக்கு அதிக சந்தோஷமாயிற்று. அவர் கூடையில் புஷ்பச்செடிகளை யெடுத்துக்கொண்டு, தமது குழந்தைகளும், வேலைக்காரியும், தோட்டக்காரனும் தம்மைச் சூழ்ந்துநிற்கத் தோட்டங்களுக்குஞ் சோலைகளுக்குஞ் சென்று அவைகளை ஆற்றங்கரைகளிலும், இன்னும் நடத்தக்க வேறு இடங்களிலும் நட்டு, ஆகாயத்தில் நக்ஷத்திரங்கள் ஆச்சரியமாய்

விளங்குவதையும், பூச்சிகள் விசித்திரமாய்ச் சிருஷ்டிக்கப்பட்டிருப்பதையும், செடிகள் விந்தைவிந்தையாய் அரும்பெடுத்து அழகாய்ப் பூப்பதையும் பற்றி அவர்களோடு சம்பாஷித்துக்கொண்டிருப்பார். ப்ரை பெருமாட்டியார் அந்த ஊருக்குச் சென்றவுடன், அங்கே பெண்களுக்கென்று ஒரு பாடசாலை ஏற்படுத்தினார். அவர் தமது இயற்கையான அன்போடு அதில் அப்பெண்களுக்குப் பாடஞ்சொல்லிவந்தார். அவர் எப்பொழுதும் ஏழைகளுக்கென்று கம்பளம், பருத்திநூற்புடவை, பாவாடை முதலிய உடுப்புக்களை மிகுதியாக வைத்திருந்ததுமன்றி, நோய்கொண்டவர்களுக்கு வேண்டிய மருந்துவகைகளையும் வைத்திருந்து, அவர்களுக்கு வேண்டும்போது கொடுத்துவந்தார்.

பெரிய அம்மை வராதிருக்கும்படி அம்மைப்பால் குத்த வேண்டுமென்று, அவர் அவ்விடத்திலே பட்டபாடு கொஞ்சமல்ல. இந்தக் காரியத்தில் உல்லன் பண்டிதர் இதன் நன்மைகளையெல்லாஞ் சொல்லி அவருக்குத் துணையாய் நின்றதனால், இதை அவர் எல்லோருங் குத்துவித்துக்கொள்ளும்படி செய்ததுமல்லாமல் தாமாகவே பலருக்கு அம்மை குத்தியும் வந்தார். அவர் செய்த முயற்சியினால் அவரிருந்த நாட்டைச் சுற்றிலும் அம்மையென்கிற பெயருமில்லாமற்போயிற்று. இந்தக் கொடிய நோயைப் பற்றித் தாக்கரே என்னும் வித்துவான் தாமெழுதிய எஸ்மாண்டு என்னுங் கதையில் "எனது பெருமாட்டியாகிய லேடி மேரி மாங்தேகன் என்பவர் துருக்கிதேசத்திலிருந்து அம்மைப்பாலைக் கொண்டுவந்து குத்த ஆரம்பித்த பின்புதான் உலகத்தவரெல்லோருங் கண்டு அஞ்சுகின்ற இக்கொள்ளைநோயின் கொடுமை நமது நாட்டில் ஒருவாறு மட்டுப்பட்டது; இக்கொடிய வியாதியினால் தங்கம்போன்ற அழகான சிறுவர்கள் நூற்றுக்கணக்காக நாளறிந்து இறந்துபோனார்கள்; யாரேனும் இதற்குத் தப்பிப் பிழைப்பதுண்டானாலும், பார்வைக்கு நலங்குறைந்து விகாரமாய் உடம்பெல்லாம் புள்ளி புள்ளியாயிருக்கும். நான் சிறுவனாயிருக்கையில் இந்நோய் இத்தேசத்தில் வந்ததுண்டு; இதுவந்தால் ஊரிலுள்ளவர்களில் பாதிப்பேரைக் கொண்டுபோய்விடும்; அழகுடையவர்களையன்றி, எவ்வளவு பலசாலிகளும் இதற்கஞ்சுவார்கள்;

அநேகர் இதற்குத் தப்பும்படி ஊரைவிட்டு ஓடிப்போனதுமுண்டு" என்று எழுதியிருக்கிறார்.

இருநூறு வருஷங்களுக்கு முன்னே இங்கிலாந்திலுள்ள கிராமங்களின் தன்மை இவ்வாறிருந்தது. அப்புறம் அம்மை குத்துவது எங்கும் பரவியதால், இக்காலத்திலே அவ்வகையான தீங்கொன்றுமில்லை. அன்றியும் அம்மை வடுவுள்ள ஐரோப்பியர் எவரையேனும் இக்காலத்திலே காண்பதுமரிது. இந்து தேசத்திலும் எல்லோரும் அவர்களைப்போல அம்மை குத்திக்கொள்ளுகிற வழக்கத்தைக் கையாண்டுவருவதால், ஐரோப்பாவில்போலவே இங்கும் ஒருவருக்கும் இனி இக்கொடிய நோய் வரமாட்டாது.

எலிஜபெத் ப்ரை என்பவர் பல குழந்தைகளைப் பெற்றுப் பெரிய சம்சாரியானார்; வருத்தமான வேலைகளைச் செய்ய இயல்பிலே அவருக்குத் திராணியில்லை; அப்படியிருந்தும் அவர் தமக்குண்டாகும் வருத்தத்தைச் சிறிதேனும் பாராட்டாமல் ஒன்றிலுங் குறைவில்லாமல் எல்லாவற்றையுஞ் செய்துவந்தார். அக்காலத்தில் அவருக்குண்டான துன்பங்கள் பல. ஐந்துவயதுள்ள அவரது அருமைக் குழந்தையொன்று இறந்துபோயிற்று. "புத்திரசோகத்திலும் பெரிய துக்கம் வேறுண்டோ?" அதனால் அவருக்குத் துக்கம் பொறுக்கக்கூடாதிருந்தும், "அவனன்றி யோரணுவு மசையாது; எல்லாங் கடவுளின் செயல்" என்றெண்ணிப் பொறுத்திருந்தார். அதுமுதல் அவருக்கு நினைவெல்லாம் அந்தக் குழந்தைமேலாய், அதற்காகத் தமது வீட்டாருடன் தேவனைத் தோத்திரஞ் செய்துவந்தார். அவர் பலவாறான வேலைகளைச் செய்துகொண்டிருக்கும்போதும் அவருக்கு இறந்துபோன குழந்தையின்மேலிருந்த ஆசையின் மிகுதியினால் அதை அடக்கஞ்செய்திருந்த இடத்திற்கு மனம் செல்லும்.

அவர் சிறைச்சாலைகளிலும், மற்றும் பல விடங்களிலுமுள்ள தாழ்ந்த சாதியிற் பிறந்த குழந்தைகளைக் கண்டு அவர்களோடு வார்த்தை சொல்லிக்கொண்டிருக்கும்போது அந்தக் குழந்தையின் நினைவு வந்து வருந்தியழுவார். இதற்குச் சிலகாலஞ் சென்றபின்பு அவருடைய பெரிய பிள்ளைகளும், பெண்களும் பள்

ளிக்கூடத்துக்குப் படிக்கப்போனார்கள்; அவருடைய சிறு குழந்தைகள்மட்டும் அவரோடு கிராமத்தில் இருந்தார்கள். அவருடைய அருமை மகள் இறந்துபோன ஆறு மாதத்திற்குப்பின் அவருக்கு ஒரு குழந்தை பிறக்க, அதை அவர் அன்பாய்ப் போற்றி வளர்த்தார். இவ்வளவு வேலைகளிருக்கையிலும் அவர் தமது மக்களுக்குக் கடிதமெழுதிப் புத்தி சொல்லிக்கொண்டு வந்தார். 1810-ம் ஞு அவர் தமது அருமைத் தந்தையை இழந்தார். அவரை அடக்கஞ் செய்த இடத்தில் அவர் உட்கார்ந்து ஒரே தியானமாய் நெடுநேரமளவும் கடவுளைத் தோத்திரஞ் செய்தார். அவ்வாறு அவர் இரைந்து ஜபஞ்செய்ததனால் அதுமுதல் அவருக்கு முன்னிருந்த கூச்சமும், அச்சமும் நீங்கித் தெளிவாய்ப் பேசப் பழக்கமாயிற்று. குவேக்கர் வகுப்பாருக்குள்ளே அவர் நன்றாய்ப் பிரசங்கஞ் செய்பவரானார். 1812-ம் ஞு அவர் குடும்ப சகிதமாய்க் குளிர்காலத்திற்காக லண்டன் நகரத்துக்குத் திரும்பிப்போனார்.

மறுவருஷத்தில் அவருடைய சிநேகிதர்களில் சிலர் கேட்டுக்கொள்ள, அவர் தமக்குத் துணையாகச் சிறு பருவமுள்ள ஒரு சீமாட்டியை அழைத்துக்கொண்டு நியூகேட் என்னுமிடத்திலிருந்த சிறைச்சாலைக்கு முதல் முதல் போய்ப் பார்த்துவந்தார். அக்காலத்தில் சிறைச்சாலைகள் மிகவும் சீர்கெட்டிருந்தன. நியூகேட் சிறைச்சாலையில் முந்நூறு பேதைப்பெண்கள் தங்கள் பிள்ளைகளோடு அடைபட்டிருந்தார்கள். அவர்கள் அத்தனைபேர்களையும், இரண்டுமுறை போய்ப் பார்த்துவந்தார். சிறைச்சாலைத் தலைவன் இன்ன குற்றஞ் செய்ததற்காக இன்னாருக்கு இன்ன இடமென்று சிறிதேனும் வேற்றுமை ஏற்படுத்தாமல், விசாரணை செய்யப்பட்டவர்கள் செய்யப்படாதவர்கள் ஆகிய எல்லோரையும் பிடித்து, வேண்டியளவு உணவுமில்லாமல், வெளிச்சமின்றிப் புழுதி படிந்து கிடந்த ஒரு அறையில் அடைத்துவைத்திருந்தான். அவர்களில் பெரும்பான்மையோருக்கு ஒரு வேலையுஞ் செய்யும்படி கொடுக்கவில்லை; அதைவிட்டு நீங்கவேண்டுமென்றால், அவர்களுக்கு ஒரு வழியுங்கிடையாது.

அந்தப் பேதைகள் எந்நேரம் பார்த்தாலும் ஆணையிட்டுச் சத்தியஞ் செய்வதும், குடிப்பதும், சூதாடுவதும், ஒருவரோடொருவர் சண்டையிடுவதுமாயிருந்தார்கள். எலிஜபெத் ப்ரை அங்கே போனபோது, அங்கிருந்தவர் அழுக்கையும் அறையின் நெருக்கத்தையும், மானிடர்க்குரிய குணங்களை யிழந்து அவர்களிருந்த துஷ்டத்தன்மையையுங் கண்டு அவர் நடுக்கமுற்று, மிகுந்த கருணைகொண்டு அவர்களை அன்போடு பார்த்தார். அதற்குப்பின்பு அவருக்கே ஒவ்வொன்றாய்த் துன்பத்தின்மேல் துன்பம் நேர்ந்தமையால், பிறகு மூன்றுவருஷ காலமளவும் அங்கே மறுபடியும் போய்ப் பார்த்துவரக் கூடாமற்போயிற்று. "பட்டகாலிலேயே படும்; கெட்ட குடியே கெடும்" என்றபடி இவ்வளவோடு போகாமல் அவர் கணவனுக்குப் பொருள் நஷ்டமு முண்டாயிற்று; ஆனதனால் அவர்கள் நாட்டிலேயிருந்த அழகான வீட்டை விற்றுவிட்டு லண்டனுக்கருகேயிருந்த ஒரு சிறு வீட்டில் வந்திருக்கவேண்டியதாயிற்று. காலக்கிரமத்தில் எலிஜபெத் ப்ரை பெருமாட்டியாரின் புகழ் எங்கும் பரவ, பின்னிட்டு அவரைக் காணுதற்பொருட்டு அரசர்களும் பிரபுக்களும் அந்த வீட்டிற்கு வரும்படியாயிற்று. பின்பு அவருக்குத் தேகம் அசௌக்கியமாய் மிகவும் துர்ப்பலமாயிருந்ததனால், அவர் தம் மக்களெல்லாரையும் விட்டுப் பிரிந்து சிறிதுகாலம் தனியே வசிக்கவேண்டியதாயிற்று.

1816-ம் ௵ அவருக்கு வயது முப்பத்தாறு ஆக, அது முதல் அவர் அதிகமாக வேலை செய்துவந்தார். அவர் இரண்டாமுறை அந்தச் சிறைச்சாலையைப் பார்க்கச் சென்றபோது, துணையின்றித் தாம்மட்டுந் தனியே போகவேண்டுமென்று கேட்டார். அந்தச் சிறைச்சாலையின் தலைவன், அவர் அப்படிச் செய்யத்துணிவது உசிதமல்லவென்றும், அவசியம் அப்படியே செய்யவேண்டுமென்றால், கடிகாரத்தையாவது, பணப்பையையாவது கையோடு அவ்விடத்திற்குக் கொண்டுபோவது கூடாதென்றும் சொல்ல, அவர் அதையுங் கேளாமல், "ஐயா, உங்களுக்கு நமஸ்காரம்; நான் ஒன்றுக்கும் பயந்திருக்கவில்லை; என்னுடையதொன்றும் கெட்டுப்போகாது" என்று சொன்னார். உடனே அவர் நல்லதென்று, தடைசொல்லாமல் அவரை விட்டுவிட, அவர் அந்த

க்ஷணமே அங்கே சென்று அந்தப் பாவிகள் அத்தனை பெயருங் கும்பலாகச்சூழ அவர்களுக்கு நடுவே நின்றார். அன்பு, சித்த சுத்தி, பொறுமை இவையனைத்தும் ஒன்றாக உருவெடுத்து வந் தாற்போன்ற அந்த உத்தமி தங்களுக்கு நடுவேவந்து நின்றதை அவர்கள் கண்டவுடன் பிரமித்துச் சிறிதுநேரமளவும் ஒன்றும் பேச நாவெழாமலிருந்து, அது தெளிந்தபின்பு ஓவென்றோல மிட்டு, பணம்பணமென்றார்கள். அந்தப் பேய்க்கூச்சலையும், அழுகுரலையுங் கேட்கவே அவருக்கு முதலில் ஒருவாறு அச்ச முண்டாயிற்று. அப்பொழுது இன்னவண்ணம் அவர்களோடு பேசவேண்டுமென்று அவருக்குத் தோற்றவில்லை. ஆதலினால் அவர் தம்மிடமிருந்த வேத புத்தகத்தை யெடுத்து, "திராக்ஷைத் தோட்டத்தலைவன்" என்னும் உபாக்கியானத்தை வாசித்து அதற்கு வேதாந்தபரமாய் அருத்தஞ்சொல்லிப் பிரசங்கித்தார்.

அவர் குரல் குயிலின் குரல்போல இயல்பாகவே இனியது. அவர் வாசிக்கத் தொடங்கினதைக் கேட்டு அங்கிருந்தவர்கள் அத்தனைபேரும், அலைகடலில் எண்ணெயை உகுத்தாலெப்படியோ அப்படியே பாவைகள்போல அசைவற்று நின்று கண்ணுங் கருத் துமாய் ஆசையோடு அதைக் கேட்டுக்கொண்டிருந்தார்கள். பிர சங்கமானபின்பு அவர் அவர்களை நோக்கி, உங்களைக் காண்கை யில் துன்பமுற்றிருக்கிறீர்களென்று தோற்றுகிறது; அன்றியும் வஸ்திரமில்லாதிருக்கிறீர்கள். யாராவது இங்குவந்து உங்களுக் குள்ள வருத்தங்களைத் தீர்க்கிறதாக இருந்தால் அது உங்களுக்குச் சம்மதமாகவிருக்குமா என்றார். அதற்கு அவர்கள், "அம்மா, எங்களை ஏனென்று கேட்பா ரொருவருமில்லை; ஏற எடுத்து விழிப்பாருமில்லை; நாங்கள் கெட்ட கேட்டிற்கு எங்களுக்குச் சிநேகிதர்களுமுண்டோ" என்றார்கள். அதற்கு அவர், "உங்க ளுக்குத் துணைசெய்தற்பொருட்டாகவே நான் இங்கே வந்திருக்கி றேன்; நீங்கள் நான் சொல்லியபடி செய்வீர்களேயானால் நான் உங்களுக்குத் துணையாவேனென்று நினைக்கிறேன்" என்றார். அந்தப் பேதைப்பெண்கள் அத்தனைபேரும் அவரைச்சுற்றி நின்று, இனி இந்த உத்தமி இங்கே மீண்டும் வருவதேது; ஒரு நாளும் இனிமேல் இவர் இந்தவிடத்துக்கு வரமாட்டாரென்று அச்ச

மூற்று அழுதகண்ணுஞ் சிந்தினமூக்குமாய் நின்றார்கள். அதற்கு அவர் தாம் அவசியந் தப்பாமல் வருவதாக அவர்களுக்கு நம்பிக்கையுண்டாகும்படி சொன்னார்.

அவர் மறுபடி அங்கே சென்றபொழுது அங்கிருந்த குழந்தைகள் நல்ல உணவில்லாமலும், நல்ல காற்றில்லாமலும், படிப்பில்லாமலும், ஒரு வேலையுமின்றி அலங்கோலமா யிருந்ததைக் கண்டு, அந்தக் குழந்தைகளுக்கு வேண்டியபடி நன்மைசெய்தால் அவர்களுடைய தாய்மார் அந்த உபகாரத்தை யெண்ணிக் குணப்படுவார்களென்று நினைத்தார். அவர் அவர்களை அழைத்து, உங்கள் குழந்தைகளைப் படிக்க வைப்பதற்காகப் பாடசாலையொன்றை வைக்கவேண்டுமென்று நினைக்கிறேன்; இதற்குச் சற்றே நீங்களும் துணைசெய்வீர்களாவென, அவர்கள் ஆநந்தக் கண்ணீர்ப் பெருக்குடன் சம்மதித்தார்கள்.

அந்தச் சிறைச்சாலையின் அதிகாரிகள் அதிலிருந்த ஒரு அறையைப் பாடசாலையின் உபயோகத்திற்கென்று கொடுத்தார்கள். அவர்கள் தங்களுள் ஒருத்தியை அந்தக் குழந்தைகளுக்குப் பாடஞ்சொல்லிக் கொடுக்கும்படி நியமிக்க, ப்ரை நலம்பெற நடத்துதற்பொருட்டுச் சில சீமாட்டிகளைச் சேர்த்து ஓர் சபைகூட்டி, அவர்களுள் ஒவ்வொருவரும் முறை முறையாக அதைப் போய்ப் பார்த்துவரும்படி ஏற்பாடுசெய்தார். சிறையிருந்த ஸ்திரீகளில் அநேகரை அந்தப் பள்ளிக்கூடத்தில் சேர்ந்து படிக்கும்படி சொன்னதில், அங்கே போதுமான இடமில்லாததனால் அப்படிச் செய்ய வாய்க்காமற்போயிற்று. ஆரம்பத்தில் சிறுவர்களுக்கென்று ஏற்படுத்திய அந்தப் பாடசாலை சீக்கிரத்திலேதானே ஸ்திரீகளும் வந்து சேர்ந்துகொண்டு படிக்கும்படி பெரியதாயிற்று. அதில் படிப்பதற்கு நிபந்தனைகள் அதிகமாக இல்லை; பாடஞ்சொல்லிக் கொடுப்பதற்காகவென்று ஒருத்தியை நியமித்தார்கள். குற்றவாளிகள் அவரவர்கள் செய்த குற்றங்களுக்கேற்றபடி வேறு வேறு வகுப்பினராகப் பிரிக்கப்பட்டார்கள். பிச்சைபுகல், சத்தியம்பண்ணல், கட்குடி, சீட்டாடுதல் இவை அனைத்தும் இனிமேல் ஒருபொழுதுங் கூடாதவையென விலக்கப்பட்டன; பாடசாலைக்கு அதிபர்களாக ஏற்படுத்தப்பட்ட பெரு

மாட்டிகள் பெரும்பான்மையாய் அந்தச் சிறைச்சாலையிலிருந்தவர்களே. தினந்தோறும் காலையில் அந்தப் பாடசாலையைப் பரிபாலித்து வந்த ஸ்திரீகளில் யாரேனும் ஒருவர் வேதபுத்தகத்திலிருந்து ஒரு அத்தியாயத்தைப் படிப்பார். வாரந்தோறும் ப்ரை தாமே காலையில் ஒருமுறை போய்ப் பார்த்துப் படித்துவிட்டு வருவார். இவ்வாறு ஒன்றரை வருஷகாலம் நடந்துவந்ததில், யாவருங் கண்டு அதிசயிக்கும்படி அந்தச் சிறைச்சாலையிலிருந்தவர்களெல்லாரும் சீர்திருத்தம் பெற்றார்கள். அவ்விடத்தில் எங்கே பார்த்தாலும் எல்லா மமர்ந்து ஒழுங்காயிருந்தன; அதற்கு முன்னே காட்டுமிருகங்களைப்போல அடங்காமல் ஒலமிட்டவர்களெல்லாரும் குற்றமற்றவர்களாகி, ஓயாமல் ஏதேனும் ஒரு தொழிலில் அமர்ந்திருந்தார்கள்.

ஒருவருஷ காலத்திற்குள்ளே அதில் சிறையிருந்த ஸ்திரீகளும் குழந்தைகளுமாகச் சேர்ந்து அவுஸ்திரேலியாவிற்கு அனுப்பப்பட்டிருந்த குற்றவாளிகளுக்கு அனுப்புவதற்காகச் சற்றேறக்குறைய 20,000 உடைகளை செய்து தைத்தார்கள். அதைக் கண்டு அந்தச் சிறைச்சாலையின் அதிகாரிகள் ஆச்சரியப்பட்டார்கள். இவ்வளவுமாத்திரமேயல்ல; அங்கே முன்னிருந்தபடியில்லாமல் திருட்டெல்லாம் அடியோடு நின்றுவிட்டன; கொடுத்த பண்டத்தைக் கெடுத்துவிட்டதைப்பற்றிய இரண்டு குற்றங்களைத் தவிர்த்து வேறொன்றுமில்லை. ஊரதிகாரியும் குருவும் இதைக் கண்டு அதிசயித்தனர்; நகரபாலகர்களும் அந்த அதிசயத்தைப் பார்க்கவேண்டுமென்று அங்கே சென்றார்கள். அதனால் எலிஜபெத் ப்ரைக்குண்டான புகழுக்கு அளவில்லை. அதில் சிறையாக இருந்த ஓர் உத்தமி அவரைப்பற்றி "அந்த லோகோபகாரியையும், அவர் நியூகேட்டுச் சிறைச்சாலைக்கு வந்ததனையும், ஆண்டவன் ஆசீர்வதிப்பாராக; அவர் எங்களுக்குச் செய்யவேண்டிய யாவற்றையுஞ் செய்தார்; அவரை நாங்கள் எந்நாளும் ஆசீர்வதிக்க மறவோம்" என்று சொல்லியிருக்கிறார்.

ப்ரை பெருமாட்டியார் உலகத்தார் தம்மைப் புகழும் புகழ்ச்சிக்காகப் பாடுபடவில்லை; தம்மை யாவரேனும் வர்த்தமான பத்திரிகைகளில் புகழ்ந்தெழுதியதைக் கண்டால், அதுமுதல் சிறிது

காலம் அவர் சிறைச்சாலைக்குப் போய்வருவதை விட்டிருப்பார். குற்றவாளிகளான ஸ்திரீகளை இங்கிலாந்திலிருந்து பிறநாட்டுக்கு அனுப்பினபோது, அவர்களுக்குக் கப்பற் பிரயாணகாலத்தில் செய்யத்தக்க வேலைகளை யேவி, படிப்பதற்கு வேண்டிய நல்ல புத்தகங்களையுங் கொடுத்துக் கப்பல்வரையிலுங்கூடப் போய் வழிவிட்டார். அதற்குமுன்னே, சிறைப்பட்டவர்களைக் கப்பலேற்றி அயல் நாடுகளுக்கு அனுப்பும்போதெல்லாம் மாட்டுமிருகங்களைச் சேர்த்துக்கப்பலேற்றினால் எப்படியோ அப்படிப்போலவேயாயிருக்கும்; இப்பொழுதோவெனின் அப்படி யொன்றுமில்லாமல், ப்ரை பெருமாட்டி அங்கே செல்லும் ஸ்திரீகளுக்குச் சங்கங்களைப் பற்றிச் சொல்லும் நற்புத்திகளையும், அனைவர் விஷயமாகக் கடவுளை நோக்கிச் செய்யும் பிரார்த்தனையையுங் கேட்பதற்காக மாலுமிகள் கப்பலின் கயிற்றைப் பிடித்துத் தொங்கிக்கொண்டே பார்ப்பார்கள்.

லண்டன் நகரத்தில் சிறையாக வைக்கப்பட்டிருந்த ஸ்திரீகளுக்கு மாத்திரமே அவரால் உபகாரமுண்டாயிற்றென்பீர்களோ? அல்ல; இங்கிலாந்து, ஸ்காட்லாந்து இந்நாடுகளின் பெரிய நகரங்களிலுள்ள சிறைச்சாலைகளுக்கும், தலைத்தியிலுள்ள தீவுகளுக்கும் அவர் போய் வந்தார். அவர் எந்த விடத்திற்குப் போனாலும், பெண்களை வைத்திருக்கும் சிறைச்சாலைகளையும், சங்கங்களையும் பற்றி அவற்றின் அதிகாரிகளுக்குத் தமது அபிப்பிராயத்தை எழுதித் தெரிவித்துவந்தார். அவரது புகழ் பரவினது தமது நாட்டில்மாத்திரமேயல்ல; அவருடைய அபிப்பிராயத்தைக் கேட்டுச் சீர்திருத்தஞ் செய்தற்பொருட்டு, பொர்ஷியா, பெல்ஜியம், பிரான்ஸ், ஜர்மனியாகிய இந்த ராச்சியங்களின் அதிகாரிகளும் அவருக்குக் கடிதமெழுதினார்கள். 1838-ம் ௵ அவர் தமது கொழுநனோடு பிரான்ஸ் தேசத்திற்குப் போய் அங்குள்ள வைத்தியசாலைகள், பாடசாலைகள், மடங்கள், சிறைச்சாலைகள் ஆகிய இவற்றையெல்லாம் பார்த்துவந்தார். அங்கே போனபோது அவர் அத்தேசத்து அரசனையும் ராணியையுங் கண்டு வார்த்தை சொன்னார்; தருமஞ்செய்கிற விஷயத்தில் அவர்களும், தாமும் ஒரேவிதமாயிருப்பதைக் கண்டு தமக்குள்ளே ஆனந்தப்பட்டார்.

அடுத்த வருஷத்தில் அவர் விசாரணையிலிருந்த சிறைச்சாலையின் வரும்படி சற்றே குறையத்தலைப்பட, அவர் அதுவே கருத்தாயிருந்தார். சிறிய பெண்களும், ஸ்திரீகளும் தனியே இருக்க அங்கே இடங்கள் ஏற்படுத்தப்பட்டன; சிறைப்பட்டவர்களைப் பிறதேசத்துக்கு அழைத்துக்கொண்டுபோகிற கப்பல்களுக்கு உடனுக்குடன் பணம் வேண்டியிருந்தது. ஆதலினால் அவற்றிற்கெல்லாம் வேண்டும் பொருளைச் சேகரிக்கும்பொருட்டு, அவர் பல பண்டங்களை விற்குஞ் சந்தையொன்றைச் சீராக வைத்து விற்றதில், ஆயிரம்பவுன் இலாபங் கிடைத்தது. இதற்குப்பின் ப்ரை இரண்டாவதுமுறை ஐரோப்பாவில் யாத்திரை சென்றார். இம்முறை அவர் ஸ்விஜர்லாந்துவரையிலும் கருணைகொண்டு சென்றார். அடுத்த வருஷம் அவர் ஜர்மனி, பெல்ஜியம் இந்நாடுகளுக்குப் போனார். இந்த இரண்டுநாட்டு அரசரும், அரசியும் அவரைக் கண்டு அதிகமாகக் கொண்டாடினார்கள்.

அவர் இவ்வாறு கண்டு வார்த்தைசொன்ன காலங்களில் அவர்களுக்கு மாலை சூட்டினதுமில்லை; தோத்திரபத்திரம் எழுதிக் கொடுத்ததுமில்லை; ஆபரணங்களால் அலங்கரித்ததுமில்லை; உபசார வார்த்தைகள் சொன்னதுமில்லை. இதுவிஷயத்தைப்பற்றி அவருடைய சகோதரன்மகள் எழுதியிருப்பதைப் படிப்பது யார்க்கும் இன்பந்தரத் தக்கதாகுமென்று கருதி அதை அடியில் எழுதுகிறோம் :—“என்னுடை அத்தை ஜர்மனி தேசத்திலுள்ள சிறைச்சாலையைப் பார்க்கவேண்டுமென்றிருந்ததை, அந்நாட்டில் பெண்கள் சிறைச்சாலையின் அதிகாரத்தை வகித்துவந்த சீமாட்டிகளின் சங்கத்தார், ராஜகுமாரியாகிய வில்லியத்துக்கு அறியப்படுத்தியிருந்தார்கள். இந்தச் செய்தியைக் கேட்டவுடன் அந்த ராஜகுமாரியும் அதிக ஆசையோடு அப்படியே செய்யலாமென்று அநுமதி கொடுத்து, தமக்கு அதில் அதிக சந்தோஷமென்று காட்டுதற்பொருட்டு அந்தச் சபையைத் தமது அரண்மனையிலே வந்து கூடும்படி செய்தார். இதுமாத்திரமல்லாமல் அவர் தமது நண்பரில் இன்னும் பலரையும் அத்தையை உபசரிக்கும்படி வரவழைத்தார். அத்தை அங்கே போனபோது நாற்பது சீமாட்டிகள் கூடியிருந்தார்கள். தமிழ் நாட்டாராகிய நமக்கு, கூர்ச்சர

நாட்டிலே வழங்கிவருகிற கூர்ச்சர பாஷை எப்படித் தெரியாதோ அப்படியே, ஜர்மன் பாஷை இங்கிலாந்து தேசத்தாருக்குத் தெரியாது ஆதலால், கவுண்டு கார்பன் என்பவர் அதை மொழிபெயர்த்தார்.

“நாங்கள் அங்கே போனபோது ராஜகுமாரி தாமே எழுந்து வந்து எங்களை அதிகமான அன்போடு அரண்மனைக்குள்ளே அழைத்துக்கொண்டுபோய் உட்காருவித்தார். அரண்மனையிலுள்ள மற்றவர்கள் வருமளவும் நாங்கள் அவ்விடத்திலே சற்றுநேரம் வார்த்தை சொல்லிக்கொண்டிருந்தோம். அங்கே வந்திருந்த சீமாட்டிகளெல்லாரும் அங்கே அடுக்கடுக்காயிருந்த அறைகளில் உலாவிக்கொண்டிருந்தபடியே விநோதமாகப் பேசிக்கொண்டு, சற்றுநேரம் ராஜகுமாரியின் வரவிற்கு எதிர்பார்த்திருந்தார்கள். சற்றுநேரத்திற்குள்ளெல்லாம் அவரும் வந்தார். ராஜகுமாரனாகிய சார்லஸ் அவ்விடத்திலிருந்தார்; இளவரசரும் அங்கே உடனே வந்துவிட்டார்.”

“அத்தைக் கெதிராக எழுத்துப் பீடத்தின்மேல் எழுதுகோலும், மசியும், காகிதமும் வைக்கப்பட்டிருந்தன. மற்றச் சங்கத்தாரைப்போலவே என்னுடைய அத்தையும் பற்பலவாகிய விதிகளை எழுதி அவற்றை அங்கிருந்தவர்களுக்கு வாசித்துக்காட்ட, அவையனைத்தும் ஜர்மனி பாஷையில் மொழிபெயர்க்கப்பட்டன. இங்கிலாந்து தேசத்திலுள்ள சங்கங்களைப்பற்றி அத்தை சங்கிரகமாகச் சொன்னார். எல்லாம் முடிந்தவுடன், அத்தையானவர் வேத புத்தகத்தை யெடுத்துப் படித்து, அவர்களுடைய க்ஷேமத்தின்பொருட்டும், அவர்கள் இனிச்செய்ய நினைத்திருக்கின்ற காரியங்கள் இனிது முடிதற்பொருட்டும் பிரசங்கித்தார். அதன் பின்பு, ஜர்மனியைவிட்டு நாங்கள் இங்கிலாந்துக்குத் திரும்பிப் போவதற்குள்ளே எங்களோடு வார்த்தை சொல்லவேண்டுமென்று ராஜகுமாரி எங்களை அழைத்தமையால், நாங்கள் அரண்மனைக்குப் போயிருந்தோம்; அவர்களெல்லோரும் அகமகிழ்ச்சி, முகமலர்ச்சியோடு ஆதரவாய் உபசரித்து அனுப்பினார்கள்” என்கிறாள்.

மகிமைபெற்ற நமது விக்டோரியா சக்கரவர்த்தினியாரின் அருமை மருமகளும், இப்பொழுது இந்தியாவுக்குச் சக்கரவர்த்தினியாயிருப்பவருமாகிய அலெக்ஸாண்டிரா ராணியார் பிறந்தவிடமாகிய டென்மார்க்கு தேசத்து அரசன் ப்ரை பெருமாட்டியை ஆதிமுதற்கொண்டே கௌரவமாய் நடத்தி வந்தார். அந்நாட்டரசி அங்குள்ள பாடசாலைகளையும், மற்றுமுள்ள இடங்களையும் அவர் பார்க்கும்பொருட்டு அவரைத் தமது ரதத்திலே தம்மோடு சமமாக ஏற்றிக்கொண்டுபோய்க் காட்டியதுமன்றி அவரைத் தமக்கும் அரசனுக்கும் நடுவிலே வைத்துக் கொண்டு சாப்பிட்டார். இவ்வாறு அரசரோடு ஒரே பந்தியில் விருந்துண்ணும் பெருமையைப் பெறுபவர்கள் பெரும்பான்மையாய் அக்காலத்திலே அவர்களுக்குச் சந்தோஷமுண்டாகும்படி, நாட்டுவளம், நகரச்சிறப்பு, துரைத்தனப்பாங்கு முதலியவற்றின் விஷயமாய்ப் புகழ்ந்து கொண்டாடுவது வழக்கம்.

ப்ரை பெருமாட்டியைப்போலவே அவர் சகோதரன் மனைவியாகிய கர்னி பெருமாட்டியும், உலகத்தவர்க்கு நன்றி பயக்கத் தக்க இந்தத் தருமகாரியத்தில் அவரோடுகூடவே அவருக்குத் துணையாயிருந்தார். அவர்கள் இருவரும் அந்த வேலையில் பேதைகளான சனங்கள் படும் வருத்தங்களையெல்லாம் அரசனிடத்திலும், அரசியிடத்திலும் விருந்துண்ணும்போது நன்றாய்ப் படும்படி எடுத்துச் சொன்னார்கள். அவர்களுடைய நாடாகிய டென்மார்க்கிலுள்ள சிறைச்சாலைகளிருந்த பரிதாபமான நிலையைப்பற்றி வேண்டிய அளவு முறையிட்டார்கள். டென்மார்க்கு தேசத்தார் குடியேறிய மேற்கு இந்தியா தீவுகளில் அடிமை வியாபாரம் நடப்பதைப்பற்றித் துக்கித்தார்கள். கர்னி பெருமாட்டி அப்பொழுதுதான் மேல் இந்தியா தீவுகளுக்குப் போய் அங்கே நடப்பதையெல்லாம் நேரில் பார்த்து வந்ததனால் அந்த அக்கிரமங்களையெல்லாம்பற்றி நெடுநேரமளவும் பேசினார்.

இவ்வாறாக ப்ரை பெருமாட்டி சிறைச்சாலையைச் சீர்திருத்தியதும், ஸ்திரீகளின் சங்கங்களை ஏற்படுத்தியதும், சிறைமீண்ட பெண்களுக்கும் குழந்தைகளுக்கும் வீடு வாசல்களை வாங்கிக் கொடுத்ததும் மாத்திரமேயல்ல; கடற்கரையோரமாய் அங்கங்கே

காவலாயிருந்த மனிதர்கள் கல்விகற்குமாறு ஐந்நூற்றுக்குக் குறைவில்லாமல் புத்தகசாலைகளை ஏற்படுத்தினார்; நகரங்களாவது, கிராமங்களாவது அருகேயில்லாமல் வெகு தூரத்துக்கப்பால் தனியேயிருக்கும்படி நேரிடுகிறவர்களுக்குப் படிப்பதற்கு நல்ல புத்தகங்களில்லாவிட்டால், நல்லறிவின்றித் தெய்வபக்தி குன்றி, நொடிப்பொழுது யுகப்பொழுதுபோல வருத்தமாயிருக்குமென்று அதற்கு முன்பே அவர் அறிந்திருந்தார்.

இதற்கென்று 500 இடங்களேற்பட்டு, ஆணும், பெண்ணும், குழந்தைகளுமாக 21,000 பேர் படித்தார்களென்றால், அது எவ்வளவுதூரம் பரந்திருக்கவேண்டுமென்றதை யறிந்துகொள்ளலாம் இதற்காகக் கைமொப்பக்காரரிடமிருந்து வருஷமொன்றுக்கு ஆயிரம் பவுன் கிடைத்தது; துரைத்தனத்தாரை ஐந்நூறு பவுன் கேட்டதில், அவர்கள் தடைசொல்லாது அந்தத் தொகையைக் கொடுத்ததுமல்லாமல், பின்னிட்டு வேறாக நானூறு பவுனுங் கொடுத்தார்கள்.

இவ்வாறாக அவர் தொடங்கிய காரியம் நிர்விக்கினமாய் நிறைவேறியது. அவர் இந்தப் பணத்தைக்கொண்டு கடற்கரையோரத்திலே யிருக்கிறவர்களுக்காக 12,880 புத்தகங்கள் அடங்கிய 780 புத்தகசாலைகளையும், கப்பல்களிலே பிரயாணஞ்செய்கிறவர்களின் உபயோகத்திற்காக 1867 புத்தகங்களடங்கிய 48 புத்தகசாலைகளையும் ஸ்தாபித்தார்; கப்பல்களிலுள்ள சிறுவர்கள் கல்வி பயிலுதற்பொருட்டு 6464 பாடசாலைப் புத்தகங்களையும் வாங்கினார். இவற்றைத் தவிர சிறு புத்தகங்கள் 5357 இருந்தன; இவையெல்லாஞ் சேர்ந்து 26,568 புத்தகங்களிருந்தன. ப்ரை செய்த தருமந் தழைத்தோங்கவே, அவர் பெருமை எங்கும் பரந்து அவரால் உபகாரம்பெற்று முன்னுக்கு வந்தவர்கள் அவருக்கு இன்னாரென்று தெரியாதிருந்தும், அவர்கள் அந்நன்றியை மறவாமல் அவருக்கு வந்தன பத்திரங்கள் எழுதியவண்ணமாயிருந்தார்கள். கடைசியாக அவர் மருத்துவிச்சிகள் என்ற ஓர் கூட்டத்தாரிருப்பது எல்லோருக்கும் அவசியமென்று கண்டு, புதிதாய் அவர்களை ஏற்படுத்தத் தொடங்கினார்; அவர் நோயாளியிருக்கும் அறை

களுக்குச் செல்லுகையிலும், ஏழைகளுக்கு மருத்துவஞ் செய்யும் போதும், வயித்தியம் பார்க்கத்தெரிந்த நல்ல பெண்களில்லாமையி ஞல் அப்படிப்பட்டவர்கள் அவசியமென்று நினைத்துத் தாமே முதலில் பலரைச் சேர்த்து அவர்களைப் பயிற்றுவிப்பதே தொழி லாக இருந்தார்.

இந்நன்முயற்சியில் அவர் சகோதரனுடைய மனைவியாகிய ஸாம்யுவெல் கர்னி பெருமாட்டி அவருக்கு வேண்டியபடியெல் லாந் துணையாயிருந்தமையால், அந்த வேலை முழுவதையும் அவர் வழியாகவே பார்த்துவரும்படி விட்டுவிட்டார். அதற்கு மகா ராணியார் வேண்டுமளவு உதவிசெய்ய, இளமைப்பருவமுள்ள ஸ்திரீகள் அநேகரைத் தேர்ந்தெடுத்து, வயித்தியஞ்செய்யக் கற் றுக்கொடுத்தார்கள்; அந்தக் கூட்டத்தாரைச் சேர்ந்த பெண்க ளெல்லாரும் ஒருவருக்கொருவர் சகோதரிபோலிருந்து உடை நடைபாவனைகளில் ஒரே மாதிரியாயிருந்தார்கள். அவர்களில் ஒவ்வொருத்தியும் வருஷமொன்றுக்கு இருபது பவுன் சம்பளம் பெற்றுவந்தாள். இதைக்கொண்டு பார்க்குமளவில் ப்ரை பெரு மாட்டியின் சரித்திரமும் ப்ளாரென்ஸ் பெருமாட்டியின் சரித்திர மும் ஒன்றோடொன்று ஒற்றுமையாகின்றன; அது எவ்வாறெ னில், 1840-ம் ௵ மருத்துவப்பெண்கள் கூட்டம் முதலிலுண் டாக்கப்பட்டது; அக்காலத்தில் ப்ளாரென்ஸ் பெருமாட்டியா ருக்கு வயது இருபது; ஆதலினால் அவர் அந்தக் காலந்தொடங்கி ப்ரை பெருமாட்டியின் கருத்துக்கிணங்க, அதில் ஆசைபற்றி, அதன்பின் தமது ஜீவகாலம் முழுமையும் அதிலேயே செலுத்தின ரென்று எண்ணுவதற்கிடமுண்டு.

இளவரசராயிருந்த பிரின்ஸ் ஆவ் வேல்சுக்கு ஞானஸ்நானம் நடக்கையில், அதற்காக ஜர்மனி தேசத்து வேந்தர் வந்திருந்தார். அப்பொழுது அவர் ப்ரை பெருமாட்டியைக் கண்டு பழமைபாரா ட்டி வார்த்தை சொல்லியதுமல்லாமல், தாமே அவர் வீட்டுக்குச் சென்று அவரோடுகூட இருந்து சிற்றுண்டியுண்டு அவரைக் கௌரவப்படுத்திவிட்டுப் போனார். தர்மகாரியமாக ப்ரை பெரு மாட்டி இதற்குமுன் ஜர்மனிக்கு யாத்திரை போயிருந்ததை அவர் மறந்ததுமில்லை, அலக்ஷியஞ்செய்ததுமில்லை. சிறைச்சாலைகளி

லும், பைத்தியக்காரர்களை வைத்திருக்கும் வைத்தியசாலைகளி லும் வேண்டிய சீர்திருத்தங்களைச் செய்யவேண்டுமென்ற ஆவலு டன் எவ்வளவோ தூரம் யாத்திரைசெய்த ஒரு ஸ்திரீயை அவள் வீட்டிலேபோய்ப் பார்ப்பது முறைமையேயென்று அவர் தீர்மா னித்தார்.

இந்தியாவின் சக்கரவர்த்தினியாகிய விக்டோரியா பெருமாட் டியார் தமக்கு விவாகமாகிச் சிலநாள் சென்றதும், ப்ரை செய்யத் தொடங்கிய நன்மைகளுள் ஒன்றாகிய திக்கற்ற பெண்களுக்குத் துணைசெய்யுந் தருமத்துக்கென்று ஐம்பது பவுன் கொடுத்தனுப் பினதுமன்றி, தம்மை வந்து பார்க்கும்படியும் அவளை வரவழைத் தார். லண்டன் நகரத்தில் அரண்மனை வீட்டில் பெரிதான விருந் தொன்று நடந்தபொழுது ப்ரை பெருமாட்டியார், நமது சக்கர வர்த்தினியாரின் நாயகரான ஆல்பெர்ட் பிரபுவுக்குப் பக்கத்தில் வீற்றிருந்து விருந்துண்டார். அப்பொழுது அவர் அந்த ராஜ பிரபுவுடன் என்ன பேசிக்கொண்டிருந்தாரோ அதை ப்ரை பெரு மாட்டி தாமே சொல்லியிருப்பதைக் கேட்பது பிரியமாயிருக்கு மாதலால், அதை அடியிற் குறிக்கிறோம்:—"விருந்துண்ட போது மகாராணியாரின் பர்த்தாவான ஆல்பெர்ட் ராஜபிரபு வுடனும், இங்கிலாந்துக்கு அக்காலத்திலே பிரதான மந்திரியா யிருந்த ஸர் ராபர்ட் பீல் துரையுடனும் நெடுநேரமளவும் வார்த் தைசொல்லிக்கொண்டிருந்தேன்; பெற்றோர் தங்கள் பிள்ளைகளு க்கு வேண்டிய அளவு வைதிகமார்க்கத்தைப்பற்றிய விஷயங்களைக் கற்பியாதிருப்பதையும், மதப்பற்றுடையவர்களாய்ப் பக்திமார்க் கம் தவறாதிருப்பதின் பெருமையையும், நான் எங்கும் போய்ப் பார்த்தமட்டில் எப்படிப்பட்டவர்களுக்கும் திருப்தியுண்டாவதற் குக் காரணம் ஈசுவர பக்தியைத் தவிர வேறொன்றுமில்லை யென்ப தையும்பற்றி நான் ராஜபிரபுவுடன் பேசினேன்; அதன்பின்பு ஐரோப்பாவின் நிலைமையையும் நியாயஸ்தலங்களிலே மதவிஷயத் தில் ஞானம் அதிகப்படுவதையும் சிறைச்சாலைகளின் நிலைமையை யும்பற்றிப் பேசினேன். இவ்வளவோடு போகாமல், நான் தேச யாத்திரைகள் செய்ததையும், ஐரோப்பாவின் தற்கால நிலைமையை யும், அங்கங்கே அவரவர்கள் காலக்ஷேபஞ் செய்யும் விதத்தை

யும், அவரவர்கள் நடையுடை பாவனைகளையும்பற்றி நாங்களெல்லோரும் சாப்பிட்டெழுந்திருக்குமளவும் வேடிக்கையாய் வார்த்தை சொல்லிக்கொண்டிருந்தோம்'' என்று சொல்லுகிறார்.

> " முயற்சிதிருவினையாக்குமுயற்றின்மை
> யின்மைபுகுத்திவிடும்"

என்றும் " ஒருவன் தன் கடமையை நன்றாய்ச் செய்வானானால், அவன் அரசன்முன்னே நிற்பான்; அற்பர் முன்னே நில்லான் " என்றும் கூறியபடி ப்ரை நன்றாய்ப் பாடுபட்டுப் பெருமை பெற்றவர்: அவருடைய சரித்திரத்தைப் படிப்பவர் தமக்குண்டாகும் நலத்தை விரும்பாமல், பரோபகாரஞ் செய்வதிலேயே தமது ஜீவகாலத்தைக் கழித்துப் பின்னிட்டுப் புகழுடம்பைப் பெறுவர். நன்றாக உழைப்பவர் அதிகமாக வேலை செய்வதனால் இளைத்துப் போவதும், சோம்பலுடையோர் வேலைசெய்யப் பயந்து தேய்பித் திரிவதும் உலக வழக்கமன்றோ? எலிஜபெத் ப்ரை பெருமாட்டியோ, நெடுங்காலம் ஓழிவின்றி வேலைசெய்து வந்ததனால், சாதாரணமான பெண்கள் பலர் கூடிச் செய்யத்தக்க பெரிதான வேலையைத் தாமொருவராகவே நின்று முடிக்க வல்லவராயினர்.

அவர் தேகவியோகமாவதற்குச் சில வருஷங்களுக்கு முன்பே அவர் தேகம் நோயால் மிக மெலிந்துபோயிற்று; கஷ்டப்பட்டாலும், சுகப்பட்டாலும் பேதமில்லாமல் எப்பொழுதும் தமது வேலையை ஒரேசீராய்ச் செய்துவந்தார். அவருடைய தெய்வபக்தி அவர் இறந்துபோவதற்கு முன்னே சொன்ன அடியிற்கண்ட வார்த்தைகளால் நன்றாய் விளங்கும்:—"நான் பதினேழு வயதுள்ள சிறு பெண்ணாயிருக்கும்போதே, நான் எப்படிச் செய்தால் கடவுள் திருவுள்ளத்துக் குவப்பாயிருக்குமோ அப்படிச் செய்யவேண்டுமென்று என் மனதிலோர் தோற்றமுண்டாயிற்று. ஆதலால், அதுமுதல் நான் இரவிலாயினும் பகலிலாயினும், தூக்கத்திலாயினும் விழிப்பிலாயினும், நோய்கொண்டிருந்தாலும், சுகமாயிருந்தாலும் எப்பொழுதும் இந்த எண்ணம் எனது நெஞ்சைவிட்டு ஒரு கணப்பொழுதாயினும் நீங்கினதில்லை" என்கிறார்.

எலிஜபெத் ப்ரை 1845-ம் ௵ அக்டோபர் 13-உ பரலோகஞ் சென்றார். அவருடைய தேகத்தைப் பார்க்கிங் என்றவிடத்தில் பல வருஷங்களுக்கு முன் சிறு குழந்தையாயிருந்தபோதே இறந்துபோன அவருடைய செல்வமகளை அடக்கஞ்செய்திருந்த இடத்துக்குப் பக்கத்திலே அடக்கஞ்செய்தார்கள். "கடவுள் தமக்காக உழைப்பவர்களைப் புதைத்துவிட்டுத் தமது வேலையைச் செய்துகொண்டேயிருக்கிறார். ப்ரை என்பவருக்கு இத்தனை பெருமையை யுண்டுபண்ணின விசித்திரமான அக்காரியங்களெல்லாம் ஒன்றாய் அபிவிருத்தியாகி, இந்நாளையும் அவர் பேர் அழியாமலிருக்கிறது." எலிஜபெத் ப்ரை, ப்ளாரன்ஸ் நைத்திங்கேல் ஆகிய இவ்விரண்டு புண்ணியவதிகளால் ஆரம்பிக்கப்பட்ட இந்த முயற்சி இக்காலத்தில் இன்னும் எத்தனையோ மடங்கு அதிகமான சீர்திருத்தம்பெற்று, இப்பொழுது இந்தியாவிலுள்ளவர்களும் அதன் பயனையெல்லாம் அநுபவிப்பதற்கேதுவாயிருக்கின்றது. எலிஜபெத் ப்ரை என்பவர் சிறப்பான ஆடையாபரணங்கள் தமக்கு வேண்டாமென்று வெறுத்தது, இந்துதேச ஸ்திரீகளின் மனதிற் பதிந்ததேயாயின், அவர்களுக்கு நல்லபுத்தி வாராதிருக்குமா? ஆடையாபரணங்களை யணிந்துகொண்டு, படிப்பில்லாமலும், கடவுளால் அளிக்கப்பட்ட அறிவை விருத்திசெய்யாமலும், நோய்கொண்டவர்களையும் வருத்த முற்றோரையும் பார்த்து ஆதரியாமலுமிருந்தால், அவர்களால் யாருக்கு என்ன பயனுண்டு; அவ்வாறான பெண்களை எலிஜபெத் ப்ரை காண்பாரேயாயின் அவர் மனம் என்ன பாடுபடாது?

"குஞ்சியழகுங்கொடுந்தானைக்கோட்டழகும்
மஞ்சளழகுமழகல்ல—நெஞ்சத்து
நல்லம்யாமென்னுநடுவுநிலைமையால்
கல்வியழகேயழகு."

1500

---

போனபோ தங்கொரு யானையைக்கண் டிதன்கிட்டப் போகலாகா தென்று சொல்லிவிட்டு நரிக்குட்டி வீட்டுக் கோடிப்போயிற்று. மற்றிரண்டு மதைப் பார்த் ததன்பின்னே வீட்டுக்கு வந்து தன் தாயுடனே யந்த நரியின் காரியத்தைச் சொல்ல, நரிக்குட்டி யதைக்கேட்டு மிகவுங் கோபித்து, "நானிவர்களிலுஞ் சௌரி யத்திற் குறைந்தவனோ? இவர்க ளென்னைப் பழித்து நகைப்பா னேன்? கூழுக்கு மாங்காய் தோற்குமா? நானிவர்களைத் தண் டித் தென்பராக்கிரமத்தைக் காட்டுவேன்; கொட்டினுற்றேள் கொட்டாவிட்டாற் பிள்ளைப்பூச்சியா?" என, அதைக் கேட்டுப் பெண்சிங்கம் நரியை யேகாந்தமா யோரிடத்திற்கொண்டுபோய் "நீ நரிக்குட்டி; உன் குலத்தில் யானையைக் கொல்லுகிற சக்தி யில்லை; உன்னை நான் வளர்த்தமையா லிந்தப் பராக்கிரமஞ் சொல்லிக்கொள்ளுகிறாய்; இவர்க ளினி யுன்னை யின்னானென் றறிகிறதற்கு முன்னே நீ புறப்பட் டோடிப்போ; இல்லாவிட்டா லவர்கள் கையிலடியுண் டிறந்துபோவாய்" என, அதைக்கேள்விப் பட்டவுடனே சம்புக மோடிப்போயிற்று. ஆதலா "னீ குசவ னென்று வெளிப்படுவதன் முன்னே விரைவா யிதை விட் டுப்போ" என, "அவனந்த ராசாவி னுத்தரப்படி யோடிப்போ னான்" என, இப்படி முதலையின் பேச்சைக் கேட்டுச் சுமுகன் "ஸ்திரீகளை நம்பவுங்கூடாது அவர்களோடு பேசவுங்கூடாது" என, முதலை "இது வெதினாற் சொல்லுகிறாய்?" என, வானரஞ் சொல்லத்தொடங்கிற்று:—

"**ந**ருமதை யாற்றங்கரையிற் பவானியென்னு மோரேழை வண்ணான் றன்கழுதை தீனியில்லாம லுளுக்குநா ளிளைத்துப்போ கிறதைக் குறித்து விசனப்பட்டுக் கொண்டிருக்கையி லொருநா ளிரையாமற் கிடைத்தபுலித்தோலைக் கொண்டுவந்து களிப்புடனே யிரவி லக்கழுதைமேற்போர்த் தூரார்பயிர்களின் மேய்வித்துக் கொண்டிருக்கும்போது, குடிகளிது புலியென்று நினைத்தோடிப் போவார்கள். இப்படி யிருக்கையி லிப்பெருவாயன் மிகவும் பருத்தொருநாட் பயிரிற் றானியத்தைத் தின்றுகொண்டிருக்கும் போதொரு பெண்கழுதையின் பேச்சைக் கேட்டு மிகவும் பெருங் கூச்சலோடு அதற்கு மறுமொழி கூறத்தொடங்கிற்று. அப்போ

தக்கொல்லைக்காரனிது புலியன்றென்று நிச்சயித் ததைப்பிடித் திடுப்பொடிய வடித்தான்; ஆதலான் மாதர்களுடனே வீணாகப் பேசலாகாது. இப்படியிருக்கையி னீ யவளைக்குறித் தென்னைக் கொல்ல விருந்தாய். இது வுன்குற்றமன்று. விசுவாசகாதகம் பண்ணுத லுன்சாதிக்கே யியல்பாயிருக்கின்றது. அது சாதுக்களின் சேர்க்கையாலுங் குணமாகாது. மேலுந் துஷ்டர்கட் குபதேசித்துப் பயனில்லை" என்றிப்படிப் பேசிக்கொண்டிருக்கையிற் சலத்திலிருந் தொரு சலசரம் வந்து "உன் மனையா ளெதிர்பார்த்துக்கொண்டிருந்து பட்டினியாயிறந்தாள்" என, அந்த நாராசஞ் செவியி லேறினவுடனே முதலை "நான் கொடியோனாதலி னித்தன்மைய விடரி லகப்பட்டேன்; முத னன்பனுக்குப் பொல்லாதவனானேன்; இரண்டாவது மனைக்கிழத்தியு மிறந்தாள்; வீடுங் காடாயிற்று; இல்லக்கிழத்தி யில்லாத வில்லஞ் சுடலையன்றோ? ஆதலான் மித்திரா! என்பிழையை மன்னி; நானுனக்குத் துரோகம் நினைத்ததனாற் றீக்குளிக்கிறேன்" என, இதைக்கேட்டு வானரம் "எவள் பேச்சினா னீ கொலைத்தொழிற் கேற்பட்டையோ வவள் சாவைக்குறித் திப்போது கிலேசித் துயிர்விட நினைக்கிறாய்; அப்படிப்பட்ட துர்க்குணியன் சாவுக்குக் களிக்கவேண்டும் என்று பின்னுஞ் சுமுகன் சொல்லுகிறது :—

"ஒரு மரத்தின்மேற் கூடுகட்டி யதில் வாழ்ந்துகொண்டிருக்கின்ற விரண்டு தூக்கணங்குருவி யாலங்கட்டியுடனே கூடப் பெருமழை பெய்கையிற் குளிரினாலே நளிர்பிடித்துப் பல்லுக்கிட்ட நடுங்கிக்கொண் டொருமரத்தடியி லொதுங்கி யிருந்து வருந்துகிற வானரத்தைக்கண்டு, "உனக்குக் கால் கைக ளிருந்தும், குளிர் காற்று முதலிய துக்கத்தை ஐயையோ! நீ யேனனுபவிக்கின்றாய்? நீ யேன் வீடுகட்டிக்கொள்ளவில்லை?" என்றிரக்கத்தாற் சொல்ல, இதைக்கேட் டத்துஷ்டக்குரங்கு "ஊசி மூஞ்சி மூடா! நீ வல்லவனுக்குப் புத்தி சொல்லுகிறையா? எனக்கு வீடு கட்டுகிற சக்தியில்லை; அதைப் பிரித்தெறிகிற சாமர்த்தியமுண்டு; இதோபார்" என் றதன்கூட்டைப் பிரித்தெறிந்தது. ஆதலாற் "கீழானோர்கட் குபதேசிக்க லாகாது" என, முதலை, "அன்பனே! நான் குற்றவாளி யென்பது மெய்யே:

ஆயினும் பழைய சினேகிதனுதலா லுன்னைக் கேட்கின்றேன்' என, வானரம் "நீ யங்கேபோய்ப் பகையாளியோடு போர்செய்; மடிந்தாற் சொர்க்கமடைவாய்; வென்றால் வீடடைந்து சுகமுறு வாய்; முன்னொரு புத்திசாலி யுத்தமனுக்குக் கும்பிடும், சூர னுக்குப் பேதமும், காரியகாரனுக்குத் தானமும், ஈடானவனுக் குத் தண்டமுஞ் செய்தாற்போலச் செய்யவேண்டும்" என, முதலை "அதெங்ஙனம்?" என, சுமுகன் சொல்லுற்றது :—

"இம்மலையின்மேற் சதுரனென்னு மொரு நரி பசியுடனே யங்கங்கே திரியுங்கா லொரு செத்தயானையைக் கண்டு, அதன் றோலைக் "கிழித் திறைச்சியைத் தின்னும் வல்லமை யதற் கின் மையா லதைக் காத்துக் கொண்டிருக்கையி லங்கேவந்த சிங்கத்தைக் கண்டு தண்டனிட, "அது நீயார்?" என, நரி "நான்றங்க ளடி யேன்; தாங்களடித்த யானையைக் காத் துட்கார்ந்திருக்கிறேன்" என, சிங்கம் "இது நான் கொன்றதன்று; வேறொருவன் கொன் றெறிந்தானோ அன்றித் தானாய் மடிந்ததோ வெப்படி யிருந்தாலு மதை நான் புசியேன்; இது வுனக்கு வேண்டுமானா லெடுத்துக் கொள்" என, நரி "சுவாமி! இது யோக்கியந்தான்; பெரியோர்க ளிடம் மாண்மையாலே சம்பாதிக்கிறார்கள்" என, சிங்க மதைக் கேட்டு வேறொரு வனத்திற்குப்போகப் பின்னு மங்கே வந்த வொரு புலியைப் பார்த்து "அம்மான்! நீ இக்காலன்முகத்தி லேனெதிர்ப்பட்டாய்? இவ்வானையைக் கொன்ற மிருகேந்திர னிங்கே யாதொரு புலிவந்தா லதற்குத் தெரியாம லெனக்குவந்து சொல்லுவாயானா லுனைக் கொன் றெறிவேன்; நான் முன்னே யொரு யானையை யடித்து முழுகப் போனவிடத்தி லொரு புலி யதை யெச்சிற் பண்ணிற்று; அது முதலாகப் புலியைத் தேடிப் பார்த்து மகப்பட வில்லையென் றென்னுடன் சொல்லியிருக்கி றான்" என, புலி யச்சிங்கத்தி னுத்தரவைக்கேட்டு மிகவும் பய ந்து "மருமகனே! எனக்குப் பிராணதானங் கொடு" எனச் சொல்லிக்கொண்டே யோடிப்போயிற்று. மறுபடி யொரு வான ரத்தைக் கண்டு முன்னே வந்த துஷ்டனைக் கும்பிட்டுப் போக்கி னோம்; இரண்டாமவனைப் பேதித்தோம்; இப்போ திதன்கையா லிதைக் கிழிப்பிக்க வேண்டுமென் றிப்படித் தன்னுள்ளே நிச்ச

யித்துப் பின்பு "வானரா! நீ நெடுநாளைக்குப்பின்பு வந்தாய்; மற்றும் பசித்திருக்கிறாய்; எனக்குஞ் சிங்கங்கொடுத்த இவ்வானை யிறைச்சியை நீ கொஞ்சந்தின்று சிங்கம் வருவதற்கு முன்னே சீக்கிரமாயோடிப்போ" என, குரங் கதைக்கேட்டு யானையைக் கிழிக்க, அதைப்பார்த்து நரி "வானரா! சிங்கஞ் சமீபத்தில் வந்தது; இனி நீ விரைவிலோடிப்போ" என, அதைக்கேட்டுக் குரங்கு பறந்தது. பின்பது பிளந்தவி த்திலிருந்த மாமிசத்தை நரி தின்னுகையி லங்கேவந்த வேறொரு நரியைச் சண்டையிட்டுத் துரத்தித் தான் வேண்டுமட்டு மிறைச்சிகளைத் தின்றது. ஆதலா னீயும் மகரத்தைக்கொன் றுன்வீட் டிற் சுகமாயிரு. "வேறொரு தேயத்திற் சௌக்கியமெல்லாங் கிடைக்குமாயினுந் தனக்குச் சிநேக னங்கொருவனு மில்லாவிட்டாற் சித்திராங்கன்போற் றுக்க மனுபவிக்க வரும்" என, முதலை, "சித்திராங்கனுக் கெப்படி யவ்வண்ணந் நேரிட்டது?" என, வானரஞ் சொல்லத்தொடங்கிற்று :-

"அயோத்தியா நகரத்திலிருந்த சித்திராங்கனென்னுமொரு நாய் பஞ்சத்தினாற் சோறுகிட்டாமல் மறுதேயத்திற் சென்றொரு கிருகஸ்தன் வீட்டுக்குப்போ யவ்வீட்டுக்காரி சோறுபோட் டாதரித்ததனா லன்று முதல் வெகுநாள்வரைக்கு மங்கே யிருந் தொருநாட் சுதந்தரமாய் வீட்டுக்கு வெளியேவந்தது. வந்தவுடனே யவ்வூர் மற்றைநாய்க ளிதன்மேலே விழுந்தினைகவிடத்திற் கடித் துக்குடலிர மாமிசங்களை வெளிப்படுத்தினதனாற் சித்திராங்கன் மிகவுந் துக்கமடைந் தென்ன பஞ்சம் வந்தாலுஞ் சுதேசத்தை விட்டு வரலாகாதெனத் தனக்குட்டேறி மீண்டு மயோத்திக் கோடிவந்தமாத்திரத்தி லதற் குறவாகிய நாய்கள் "சித்திராங்கா! அத்தேய மெப்படி யிருக்கிறது!" என, சித்திராங்கன் "அத்தேயஞ் செழிப்பா யிருக்கின்றது; மாந்தர்களுந் தயாசாலிகளா யிருக்கிறார்கள்; சுசாதிமித்திரத்துவமில்லை; ஆதலாலிவ்வண்ணந் நேரிட்டது" என்றது. "ஆனதுகொண்டு தன்னிடத்தி லிருப்பது போலச் சுகம் வேறில்லையென்கின்றேன்" என, முதலை யவ்வார்த்தைகளைக் கேட்டுப்போ யவ்வண்ணமே யெதிரியுடனே பொருது தன்வீட்டை மீட்டுக்கொண் டங்கேயே வாழ்ந்திருந்தது. ஆதலாற் பராக்கிரமத்தினாற் பாக்கியம் வழிதேடி வந்தடைகின்றது.

முற்றிற்று.



---